33

வேமன்ன பத்தியம்

ஆயிரம்மாலை.

உரையுடன்

33

உ

குருவே துணை.

மகாமகத்துவம்பொருந்திய

# வேமன்னபத்தியம்

ஆயிரம்பாடல்

## மூலமும் - உரையும்.

முதல்பாகம்.

மகாகனம்பொருந்திய

மதராஸ் சிவில் சர்வீஸ்

சார்லெஸ் பிலிப் பிரௌன்துரை

அவர்களால் சுமார் (700) எழுநூறு பாடல்களுக்கு

இங்கிலீஷ் உரையுடன் 1875-வருடத்தில்

அச்சிட்ட புத்தகத்தைக்கொண்டு

மற்றபாடல்களையுஞ்சேர்த்து

புதுவை

நாராயணதாசர் அவர்களால்

உரை எழுதித்தர,

ஜீ. ஆர். பாலஸய நாயுடு அவர்களால்

தமது

சென்னை-சூளை,

பாலவிர்த்தி போதினி அச்சுக்கூடத்தில்

பதிப்பிக்கப்பட்டது.

1909.

இதன் விலை ரூபா 1.

ஸ்ரீ

பரப்பிரம்மணேநம:

# வேமன்ன யோகீஸ்வரர்

# சரித்திரச் சுருக்கம்.

புண்ணிய பூமியாகிய இப்பரதகண்டத்தின் தக்ஷணதிசையில் பந்தர்நகரத்தைச் சார்ந்துள்ள கொண்டேடி துர்க்கமென்னும் பர்வதத்துக்குமுன்னொருகால் அரசனாயிருந்த அன்னவேமாரெட்டியென்பவருக்கு வெர்ரிவேமன்னரெட்டியென்னும் ஓர் சகோதரனிருந்தார். இவர் தமையன் அரசனாயிருந்தமையால் தான் தன்னிச்சைபோல் ஒரு தாசியின் மையலிற்சிக்கி, அண்ணனான அன்னவேமாரெட்டியின் பாரியையை வேண்டி அவள் மூலமாய் அரண்மனையிலுள்ள ஆபரணங்களையெல்லாங் கொண்டுபோய் அத்தாசிக்குக் கொடுத்தும், அவளொருநாள் வேமன்னவை நோக்கி ஓ வேமன்ன! நீ உன் அண்ணியார் மூக்கிலணிந்திருக்கும் மூக்குத்தியை இன்று கொண்டுவந்து கொடுத்தால் என்னை யணைந்து சிற்றின்ப சுகத்தை யனுபவிக்கலாம். இல்லையானால் இனி என்வீட்டிற்குள் நுழையவே கூடாதென்று துறந்தினள். வேமன்னவோ தன்னாலானவரையில் அவளுக்குச் சமாதானஞ் சொல்லியும் அவள் கேளாமையால் சரேலென இராஜ அரண்மனைக்குவந்து தன் படுக்கையறைக்குள் நுழைந்து அன்னம்புசிக்காமல் நிராய முக்காடிட்டுப் படுத்துக்கொண்டு அண்ணியாருடைய மூக்குத்தி நமக்கு எப்படிக் கிடைக்குமென்று மனவியாகூலமாயிருந்தார். அந்தச் சமயம் அவரது அண்ணியார் ஏனின்னம் வேமன்ன அமுதுண்ண வரவில்லையென்று ஆட்களை தாசிவீட்டுக்கனுப்பி அழைத்துவரச்சொன்னாள். அவர்களும் தாசிவீட்டிற்குள் நுழைந்துபார்த்து எங்குங்காணாமல் அரண்மனைக்குவந்து வேமன்னபடுத் திருக்கும் அலங்கோலத்தைக்கண்டு அரசியிடம் போய்ச் சொன்னார்கள். உடனே அந்த அம்மாள் தானே நேரில்வந்து அவரிருப்பைப்பார்த்துத் தட்டியெழுப்பியும் அவர் பேசாமல் மௌனமாயிருக்க, ஏதோமனவியாகூலமா யிருக்கின்றாரென் றுணர்ந்து, அவரை ஆதியிலிருந்து

பாலனைப்போர் காப்பாற்றியவளாதலால் மனநொந்தவளாய், அப்பா மகனே! நீ எதற்காக மனவியாகூலமடைந்திருக்கின்றாய்? என்னலாகுமானல் உடனே முடிக்கின்றேன் நீ முன்னமெழுந்துஅமுதுண்ணுவாயென்று வருந்தியழைத்தாள். இவ்வார்த்தையைக்கேட்ட வேமன்னு இது தான் சமையமென்று தாயேஉன் மூக்குத்தியைக் கொடுத்தால் அன்னம் புசிக்கின்றேன் இல்லாவிட்டால் புசிக்கமாட்டேன், என தருமைக்கண்மணியாகிய அந்தத்தாசி உன்னுடைய மூக்குத்தியைக் கொண்டுவராவிட்டால் இன்று முதல் என்னை அவள் வீட்டிற்குவரவேண்டாமென்று சொல்லிவிட்டாள். அவள் சொல்லியமுதல் இதுவரையில் ஒரு நாழிகையை ஒரு யுகமாகக் கழிக்கின்றேன். ஆதலால் உன் மூக்குத்தியை முன்னங்கொடுத்தால் அவளுக்குக் கொடுத்துச் சுகித்திருப்பேன் இல்லையானல் இப்போதே என்னுயிரை விடுகிறேனென்று சொல்லினர் அவர் பூண்டிருக்கும் தாசியின் மையலறிந்து ஓ என் அருமைப்புதல்வா? உன்னிஷ்டப்படியே என் மூக்குத்தியைக் கொடுக்கின்றேன், ஆனல் நானுன்னை வேண்டும் வரமொன்றுளது. அதாவது, நீ இந்தமூக்குத்தியைக் கொண்டுபோய் அத்தாசியை நிர்வாணமாக வரச்சொல்லி அவளது இரண்டு கால்களையும் பரப்பி நிற்கச்செய்து நீ பின்னலிருந்து அவ்விரண்டு கால்களின் மத்தியில் நீ கொடுக்க அவள் குனிந்து இரண்டு கைகளாலும் வாங்கிக்கொள்ளச்செய்ய வேண்டியது என்று தன் மூக்கிலிருந்த மூக்குத்தியைக் கழற்றிக் கொடுத்தனுப்பினள் வேமன்னுவும் தன் அண்ணியார் வேண்டிய வரத்தின்படியே தாசியின் பின்னலிருந்து இவர் கொடுக்க அவள் நாணமின்றி தன்னிரு கைகளாலும் வாங்கிக்கொண்டாள். வேமன்னு மதனலீலாவினோதனுகையால் அப்போது அவளுடைய அந்தரங்கஸ்தானத்தைப் பார்த்து, ஆடுமாடுகளுக் கிருக்கின்றதைப்போலிருக்கிறதேயென்று அதனிடம் வெறுப்புற்று சரேலென ஓட்டோடியும் வந்து தன் அண்ணியாரின் பாதத்தில் வீழ்ந்து நமஸ்கரித்து என் தாயே! உன்னல் நான் ஈடேறினேன். நீயே என் சற்குரு என்று பலவாருய்த் தோத்திரஞ்செய்து அன்றுமுதல் வீடுவாசலை விட்டு குப்பைமேடுகளிலும், தெருத்திண்ணைகளிலும் புரண்டு தெருத்தெருவாய்த் திரிந்துக் கொண்டுமிருந்தார். இப்படி யிருந்தவர் ஒரு நாள் திடீரென ஓட்டோடியும் போய் தன் அண்ணியாரின் ஸ்தனத்தின்மீது இரத்தம்வரக் கீறிப்போய்விட்டார். அவ்வேடிக்கையைப்

பார்த்தவர்களெல்லாம் அவரைப் பித்தம் பிடித்தவரென்று தூஷித்தார்கள். கிருண்ட அண்ணியார் மாத்திரம் அவர் ஏதோ ஒரு காரியத்திற்காகத்தான் இப்படிச் செய்திருப்பாரென்று தன் பத்தாவுக்கும் மற்றவர்களுக்குஞ் சமாதானங்கூறினள். மூன்றும் நாள் அவ்வுத்தமி ஜலந்திரட்டப்போகும் வழியில் பாம்புதீண்டிமூர்ச்சையாகிக் கீழேவிழ்ந்திருந்தாள் அங்கிருந்தவர்க ளெல்லாம் கண்ணீர்விட் டழுதார்கள். இதற்குள் விஷமெல்லாம் வேமன்ன கீறின காயத்தின்வழியாக வந்து விட்டது. மூர்ச்சையாகிக் கீழே விழ்ந்துகிடந்த மர்தரசும் தூங்கியெழுந்தவளைப்போ லெழுந்து வேமன்ன கீரிண காயத்தின் வழியாக விஷம் வெளிப்படுவதைக் கண்ணீர்விட் டழுதவர்களுக்கெல்லாங் காட்டி அவர் மகிமையைக் கொண்டாடினள். சிலநாள் சென்றபிறகு வேமன்ன தன் மகிமையை தன் அண்ணனும் மற்றவர்களும் அறியுமாறு தன்னண்ணனிடத்தே ஒருகாணி நிலத்தை வாங்கி, எல்லாரும் தானியவகையராக்களைப் பயிரிட்டால் இவர் ஆட்டுத்தும்மட்டங்காயைப் பயிர்செய்தார். இச்சங்கதியைக் கேள்விப்பட்ட அண்ணனான அன்னவேமாரெட்டி தன் பாரியையை யழைத்து நங்காய்! உன் மைத்துனன் ஆட்டுத்தும் மட்டங்காயைப் பயிர்செய்கிறன். நீயுமவனும் அதைத்தின்று ஜீவனஞ்செய்யுங்களென்று பரிகாசஞ்செய்தார். அவ்வுத்தமியோ அவர் செய்கையைத் தாங்கள் பரிகாசஞ்செய்வதடாது அவரோ மகாநுபாவர். வீண்காரியத்திற் பிரவேசிக்க மாட்டார் என்று கூறினள். வேமன்ன தும்மட்டங்காய் பயிரானவுடன்வழிப்போக்கியாகிய ஒரு கிழவியை யழைத்து கூலிக்கு காய்களை அறுக்கச்சொல்லி ஒருநாள் முழுதும் அறுத்தானபிறகு கூலிக்குப் பதிலாய் ஒரு காயைக் கொடுத்தனுப்பினர். அக்கிழவி அதை வாங்கிக் கொண்டு பதி லொன்றும் பேசாமல் வயிறெரிந்தவளாய் தன் வீட்டுக்குச் சென்றுள். அவளது பிள்ளைகள் அவள் கொண்டுவந்தகாயின் விருத்தாந்தத்தைக் கேட்டு வேமன்னவை தூஷித்தபடியே அக்காயை பூமியில் மோதி யடித்தார்கள். அது சுக்கற்சுக்கலாகி அதிலிருந்த விதைகளெல்லாம் பொன்மயமாய்ப் பிரகாசித்தன. அவ் விதைகளை அவர்கள் கண்டமாத்திரத்தில் வேமன்னவைப் புகழ்ந்து, அவ்வீட்டிலுள்ள எல்லாரும் மறுநாட்காலையில் அவரிடத்திற்குப் போய் வேலைசெய்து ஆளுக்கு நவ்வாலுகாய்களாகத் திருடிவைத்துக்கொண்டு கூலிக்காக வேமன்ன திருக்கரத்தால் கொடுக்

கும் ஒவ்வொரு காயையும் பெற்றுக்கொண்டு வீட்டிற்கு வந்துதிருடின காய்களை யுடைந்துப் பார்க்க அவைகளில் அக்காயின்விதைகளை யிருக்கக்கண்டு வெட்கமடைந்தவர்களாய், வேமன்னு கொடுத்த காயை யுடைத்து அதில் மாத்திரம் பொன்விதைகளிருக்கக்கண்டு, நாமினி வேமன்னு கொடுப்பதையே வாங்கிக்கொள்ள வேண்டுமென்று அன்றுமுதல் அவரிடத்திற்கே கூலிக்குப் போய்க்கொண்டிருந்தார்கள். இவர்களைக்கண்ட அவ்வூரார் யாவருமே அவரிடம் வேலைசெய்ய வாரம்பித்தார்கள். வேமன்னுவும் ஆளுக்கொரு காய் தவறாமல் கொடுத்துவந்தார். இப்படிச் சிலநாளைக்குள்ளாக காய்களையெல்லா மறுத்து இரண்டு போர்களாகக் குவித்து தன் அண்ணியின் மூலமாய் தன் அண்ணனை அப்போரிடத்திற்குவரச்செய்து இருபோர்களையுந் தம்கரத்தால் தீண்டி ஒருபோரைத்தமயனை யெடுத்துக்கொள்ளவும், இரண்டாவது போரை ஏழைகளுக்குக் கொடுக்கவும் சொல்லினர். அவரது சொற்படியே அண்ணனுர் செய்து சிலநாட்சென்றபின் அவரும் அவரது பத்தினியாரும் சிவலோகப்பிராப்தியானுர்கள் வேமன்னசுவாமிகள் குப்பைகளிலும், மேடுகளிலும், வீட்டுத்திண்ணைகளிலும் புறண்டபடியே வேண்டிய பத்தியங்களைச் சொல்லியும், குப்பைகளிலிருக்கும் உடைச்சலோடுகளி லெழுதியும், அணிமாசித்து விளையாடியுமிருந்து மறைந்தனர்.

சுபமஸ்து.





தெய்வமே துணை.

# வேமன்னயோகீஸ்வரர்

## திருவாய் மலர்ந்தருளிய

### பிரம்மவித்தியாசுலோகங்கள்.

## ௩-ம் பாடல் மூலமும்-உரையும்.



ஸ்ரீமதுமாபதியகு சிவ
சுவாமிகி தாசுண்டனங்க ஜகமுலு வொகடன்
வேமனயனியெடு தீருடு ,
நேமம்புன ஜெப்பேதீனி கிக்கமுவேமா.

(இ-ள்.) ஸ்ரீ உமாமஹேஸ்வரிக்கு நாயகனாகும் சிவபெருமானுக்குத் தொண்டனென்று புவியெங்கும் போற்றியேத்தும் வேமன்னயோகியென்னும் வைராக்கியபுருடன் ஜெகத்திலுள்ள சகல மானிடர்களும் உணர்ந்து கடத்தேரும்பொருட்டு ஜீவகாருண்ய முடையவராய் யத்தியரூபமாக திருவாய் மலர்ந்தருளினார்-எ-று.

வேமனனகயோகி வெலஸெலோகமுலோன
பூஜசேயுபுண்ணிய புருஷ—லாரா
பூஜசேசிநந்த புக்திமுக்துலகிச்சு
விஸ்வதாபிராம வினரவேமா.

(இ-ள்.) வேமன்னுயென்னும் யோகபுருடன் இவ்வுலகத்திலவதரித்து மெத்த கீர்த்தியைப்பெற்றார். அப்புண்ணியபுருடனைப் பூசைசெய்யுங்கள் ஓ சாதுக்களே அப்படி மனம்வாக்குகாயமென்னும் திரிகரண சுத்தியாய் பூசைசெய்த மாத்திரத்தில் பக்தி வியக்தி முக்தியைக் கொடுப்பார் சர்வ வியாபியாகிய ராமா கேளும் வேமா. எ-று. (உ)

நீதிவைராக்கியபக்தி விநீதுலகுனு
காதகுலுகானி ஞானசங்கலிதுலகுனு
வ்ராலகந்துனி பத்யமுல்வேலசங்கிய
சேதநந்தக வேமனசெப்பெபுவினி.

(இ-ள்.) மனுநீதி வைராக்கியம் பக்தி விரக்தி யுக்தியற்றவர்களுக்கும் பக்திக்ஞான வைராக்கிய சம்பத்தை யுற்றவர்களுக்கும் மனதுக்கும் வாக்குக்கு மெட்டாத பகவான் கல்யாணகுணங்களுக்கு நிகராக அரிதாகிய பொருளடங்கிய பத்தியங்கள் ஆயிரங்கணக்காக மந்தமதிகள் உணர்ந்து கடத்தேரும்பொருட்டு உலகத்தின்கண் வேமன்னயோகி அருளிச்செய்தார். எ-று. (ஙு)

ஔனுவேமன ஜெப்பினயாத்மபுத்தி
தெலியலேனட்டி மனுஜ—லுதேபெலெல்ல
தலனுபாசின வெண்ட்ருகல்வலெனுஜ—டு
புக்திமுக்துலுஹீனமை போவுவேமா.

(இ-ள்.) வேமன்னயோகி புகன்ற ஆத்மபுத்தியை ஆராய்ச்சி செய்து உணராத மனிதர்களனைவரும் பலதடவைகளிலும் சிக்கெடுத்த ரோமங்கள் சிரசைவிட்டு நாளுக்குநாள் யெப்படி உபயோகப்படாமற் போகுமோ அப்படி புக்தியும் முக்தியும் கைகூடி வரமாட்டாது வேமா. எ-று. (ச)

செவினிலில்லுகட்டி செப்பெனுவேமன
பட்டபயிடமோக்ஷ பதமடஞ்சு
புத்திகல்குவாரு பொந்திஸ—கிஞ்சுடீ
விஸ்வதாபிராம வினரவேமா.

(இ-ள்.) செவியில் வீடுகட்டி சொல்லியருளினர் ,வேமன்ன யோகி அக்தென்னவெனில் வெட்டவெளியில் மோக்கப்பதவியெ ன்று யூகையென்னும் தெளிவாகும் யுத்தியுடைவர்களிதை யடை ந்து சுகமனுபவியுங்கள சர்வவியாபியாகிய ராமாகேளும் வேமா.

ஸ்ரீகரம்புகவேமன செப்பினட்டி.
பத்யமுலநெவ்வரைனனு படனஜேயு
னட்டிபுருஷானி மஹிமலநிட்டி தனுசு
மன்ருஜெப்பகக்சயமே மஹினிவேமா.

(இ-ள்.) நித்யமாகிய சம்பத்தை யடையும்படி வேமன்ன யோகி அருளிச்செய்த பத்தியங்களை யாவரேனும் சர்வகால சர்வ அவஸ்தைகளிலும் யிடைவிடாது தியானஞ்செய்யும் அப்படிப் பட்ட புருடனது மகிமைகளை இப்படிப்பட்டதென்றும்அப்படிப் பட்டதென்றும் இப்புவியின்கண் நம்மால்சொல்லத்தகுமா வேமா

ஈகபடனுடகம்புன
யீகபடபுசதுவுலன்னி யீஸ்வரயனகா
எகபடாத்முடு ஜேசேனே
யாகபடாதமுனகுமிரொக்கிதன்ராவேமா.

(இ-ள்.) சிருஷ்டிதிதிசங்காரமென்னும் முத்தொழில்களால் சகலலோகங்களையும் எண்பத்து நான்குலக்ஷம் ஜீவராசிகளையும் உண்டுபண்ணுவதும் ஆதரிப்பதும் அழிப்பதுமாகி கபடநாடகம் புரியும் இந்தலீலா விபூதியில் கபடமாகிய வாசிப்புகள் யாவத்தும் பகவத்தியானமும் எந்தகபடநாடகசூத்திராவதாரி உள்ளும்புறம்பு மாக விருந்து செய்வித்தானோ அந்தகபட மனதையுடையவனுக்கு சரணம் புகுந்தேனென்று துதிசெய்வாய் வேமா. எ - று. (எ)

சிவகவுலகுநரகவுலகு
சிவலோகப்ரமதுலகுனு சிந்தாமணிகின்
சிவபக்திதத்வமுலகுனு
சிவுனகுகுருவுனகுசரணு சேயராவேமா.

(இ-ள்,) சிவபெருமானைப் பண்களால் சதாகாலமும் பாடிப் புகழ்க்கொண்டாடுங் கவிவாணர்களுக்கும் ஒன்பதுவித வியாகர ணபண்டிதர்களுக்கும் சிவலோக வாசிகளாகிய நந்திதேவர்முத லான தொண்டர்களுக்கும் சிந்தைக்குள் மணியாகி விளங்குமவ னுக்கும் சிவபக்தி தத்துவங்களை யுணர்ந்தவர்களுக்கும் சிவனுக் கும் ஆசானுக்கும் சரணம்புகக் கடவா எ-று. (அ)

கலியுகமுன நன்ன காபகுலம்புலோ
வேமனதனகீர்த்தி வெலயஜேசே
நன்னதர்மமெல்ல னூர்விலோநருலகு
கோரியெட்டெபரமு கோருவேமா.

(இ-ள்.) இந்த கலியுகத்தில் குடியானவர் குலத்தினி லவதரித்து வேமன்னுவென்னும் யோகியானவர் தன்னுடைய மகிமையென்னும் புகழை யெங்கும் பிரகாசிக்கச்செய்தார் அதெப்படியெனில் பாமர்களெல்லாம் உணர்ந்து கடத்தேரும்பொருட்டுஜீவகாருண்யமிகுந்து வேண்டிய தர்மங்களெல்லாம் மானுடர்களுக்கு அருளிச்செய்து பரத்தையடையும்படி வெளியிட்டார் வேமா. ()

காதனடெவ்வரிதோடனு
வாதுலகும்போடுவெரரி வானியுவலெனே
பேதாபேதமெருங்கியு
வேதாந்தரகஸ்யமெல்ல வேமனயெருருன்.

(இ-ள்.) யாரேனும் நன்றோ அல்லது தீதோ மொழிந்தால் அப்படிக்கல்ல இப்படியாகுமென்று தடுத்தவர்களிடத்தும் வசனிக்கமாட்டார் துர்வாதங்கள் செய்யாமல்பித்தனைப்போலநடித்து பேதஅபேதங்களையறிந்து வேதாந்த ரகசியங்களெல்லாம் வேமன யோகி அரிந்து அதில் லயித்துக்கொண்டிருப்பார். எ-று. (க0)

இகபராதுலகுனு யிதிசாதனம்பனி
வ்ராசிசதிவிவின்ன வாரிகெல்ல
மத்பகர்மமுலனு மகிமதோநடசுனு
பருலகைனமுத்தி பதமுவேமா.

(இ-ள்.) இகம்பரமெனனுமிரண்டிற்கும் இதுசாதனமென்று எழிதிப் படித்தவர்களுக்கும் அல்லது இந்த யிரகசியார்த்தத்தைக் கேட்டவர்கள் யாவர்க்கும் நடுவில்வந்தடையும் கர்மங்களையெல்லாம் தீயிற்பஞ்செனை உருவமாறச்செய்து முக்தி பதவியையளிக்கும் வேமா. எ-று. (கக)

வேமனஜெப்பினமாட்டலு
சாமம்புனசதிவின்ட்டி ஸஜ்ஜனுலெல்லன்
சோமனுதலநுந்துருகடு
நேமம்புனஜெடவைய நேர்ப்புனவேமா.

(இ-ள்.) வேமன்னசொல்லிய தத்துவக்ஞான சம்பதமென்னும் சொற்களை அன்போடு வாசித்து தேர்ந்த நல்லோர்கள் யாவரும் சோஹமென்னுஞ் சிரசிலிருப்பார்கள், அப்படிப்பட்டசத்துக்களை அரிதாகிய நிஷ்டையிலிருந்து பாருமையா வேமா. எ-று. ()

வேமுடிட்ஞுசெப்பு வெலயுபத்யம்புகு
தப்புலெல்லனியுன்ன நொப்பியுண்டு
தத்தரபடகந்து பித்தரையொப்பபசா
விஸ்வதாபிராம வினரவேமா.

(இ-ள்.) இப்படி வேமன்னயோகி அருளிச்செய்த பிரகாசம் பொருந்திய பத்தியங்களில் தப்புகளெத்தனையிருக்கினும் தேரித்தெளிந்த க்ஞானபுருடர்களுக்கு ஒப்புகளாயிருக்கும் சஞ்சலத்திற்கிடங்கொடாமலும் பிரமிக்காமலும் அதனிடத்தில் பித்தராகியிருக்குமவர்களுக்கு அவர்களேயன்றி அன்னியர்களைச் சொல்லத்தகாது ஸர்வவியாபியாகி உள்ளும் புறம்புமாய் வசிக்கும் ஓ ராமா கேளும் வேமா. எ-று. (௧௩)

வேயுவிதமு லமரவேமனபத்யம்பு
லர்த்தமிச்சுவானி னரசிகுட
குடகுடகனுகு சோத்யமௌக்ஞானம்பு
விஸ்வதாபிராம வினரவேமா.

(இ-ள்.) வேமன்னயோகி அருளிச்செய்த பத்யங்களொவ்வொன்றையும் ஆழ்ந்து பார்க்கப்பார்க்க ஆயிரம்விதங்கள்பொருந்தும்படி அர்த்தங்கொடுக்கும் அந்த வர்த்தத்தைக் கருதக்கருத ஆச்சரியப்படும்படியான க்ஞானத்தை யுண்டாகச்செய்யும் ஸர்வவியாபியாகிய ஓ ராமா கேளும் வேமா எ-று. (௧௪)

வேயுபத்யமுனு விவேகியைபக்திதோ
பட்டனஜேசினட்டி பக்துனகுனு
பாயகுண்டுமோக்ஷ பதமிசேதிதை
விஸ்வதாபிராம வினரவேமா.

(இ-ள்.) வேமன்னயோகி அருளிச்செய்தபலவாயிர பத்யங்களில் ஆயிரம் பத்தியங்களை விவேகியாகி பக்தியுடன் துதிசெய்யும்படியான பக்தனுக்கு மோக்ஷபதவியானது காதலர் மலகம்போல என்னும் நீங்காதிருக்கும் ஸாவவியாபியாகிய ஓராமா கேளும் வேமா. எ-று. (௧௫)

சதசங்கியபத்யமுனு யே
மதிமந்துடைனகானி மமததலிர்ப்பன்
யகங்கஜுநால்குபதவுலு
சிதிகண்டுனிபுரமுநந்து சித்தமுவேமா.

(இ-ள்.) நாலுசங்கபத்தியங்களை எந்த புத்திமானாகிலும் தானென்னும் ஆங்காரத்தை வெட்டியெரிந்து பாத்திரனாகி தியானஞ்செய்வாரோ அந்த விவேகியானவன் நீலகண்டனாகிய சிவபெருமான் வசிக்கும்படியான சாலோக சாமீப சாரூப சாயுச்சியமென்னும் நான்கு பதவிகளையும் உண்மையாக அடைவான் ஓ வேமா. எ-று. (கசு)

லேவுஸர்வமுனனு லியமையுன்னவு
வுன்னநீதாவுனிகி வினகராது
யிட்லுகானிநீவு யெட்லுபரப்ரம்மா
விஸ்வதாமிராம வினரவேமா.

(இ-ள்.) ஓ பராபரப்பொருளே நீ எதனிடத்திலுமில்லை சகலத்திலும் உள்ளும்புறம்புமாக யிருக்கின்றாய் உன்னுடைய யிருப்பிடமாகிலுந் தெரிந்துகொள்வோமென்றாலும் அரிதாகவிருக்கின்றது இப்படிக்காணவுங் கேழ்க்கவும் அருமையான நீ எப்படி பரபிரம்மமாகுவாய் சர்வவியாபியாகிய ஓராமாகேளும்வேமா. எ-று

தாமரயந்தவிநீர்வலே
வேமணசரிபிஞ்சுசுண்டு வெதுகுசுசிவுனின்
யாமாயநம்மகாரா தீ
மனமுனதெலியராது யிசுனிவேமா.

(இ-ள்.) தாமரையிலைபின்மீதுற்ற புனலைப்போல வேமன்ன யோகியானவர் மாயாசம்மந்தமாகிய இப்புவியின் மீதிருந்தும்மாயைக்கிலக்காகாமல் சிவபெருமானை தேடிக்கொண்டிருப்பார் ஆகையால் இந்த செகமாய்கை நம்பலாகாது மாய்கையில் கட்டுபட்டிருக்கும் மந்தமதிகளால் சிவபெருமானைக் காண்பது அருமையாகும் வேமா. எ-று. (கஅ)

கப்பயுபாமுனுபோரக
கப்பனுயாபாமும்நுங்குகைவடிமெரயன்
கப்பனுவெடலன்த்ரோசெடி
கொப்புனனுசொப்புதெலிய வேமுண்டெருகுண்.

(இ-ள்.) தவளையும் பாம்பும் போரிட அத்தவளையை யந்தப் பாம்புவிழுங்குவதைப்போலபிரகாசிக்கும் உலகமாயையென்னும் புத்திர மித்திர களத்திராதிகள்மீதுற்ற ஆசையை விலக்குமாப் போல மாயையென்னுந் தவளையை விலக்கி நித்திய மோக்ஷமார்க் கத்தை யடையும் விதத்தை வேமன்னயோகி அறிவார் எ-று.

க்ருஷ்ணபர்வமந்து க்ருத்திகலு துண்டு
க்ருத்துலு தனு க்ருஷ்ணம்ருங்கே
வெலயுக்ருஷ்ணலது வேமனம்ருங்கெரா
விஸ்வதாபிராம வினரவேமா

(இ-ள்.) இருளென்னும் அந்தகாரத்தில் பஞ்சேந்திரியங்க ளென்னுங் க்ருத்திகைகள் ஐந்தும் பொருந்தியிருக்கின்றன இப் பஞ்சேந்திரியங்களைந்தையும் அந்தகாரம்விழுங்கியது அப்படிப் பட்ட அந்தகாரத்தை வேமன்ன விழுங்கினார் ஸர்வவியாபியாகிய ஓ ராமா கேளும் வேமா. எ-று. (உ0)

பிலசினபலுககுண்டு மரிபிலசினவேமனகூரகுண்டு
தன்சலசினயெவ்வரேமனின தன்னுனுகாதனிநவ்வுசுண்டு
நாத்மதலபோயுசுண்டு பரதத்வமுநித்யமுதானெயைசதா
தெலிசினயோகிவேமனகதின் சிவரூபுடெநல்லதாவுலன்.

(இ-ள்.) யாவரேனுமழைத்தால் பேசாமலும் பின்னுமழைத் தால் வசனியாமலும் தன்னை நினைத்திடினும் யாரென்ன சொல்லி னும் தன்னையல்லவென்று சிறித்து ஆத்மாவைபரமாத்மாவினிடம் ஐக்கியப்படுத்தி பரதத்வம்நித்யம்தானாகி நிமைநேரமேனும் அன் னிய விஷயத்தில் மனதைச் செலுத்தாமலும் அறிவாலுணர்ந்த வேமன யோகியானவர் எவ்விடத்திலும்சிவரூபத்துடன் சஞ்சரிப் பார். எ-று. (உக)

கூட்டிகிலேனிவலெ கோயமுலேகனுயெல்லதாவுலன்
மாட்டிகிமாட்டிகின்மரியு மாட்டிகிமாட்டகுபத்யபத்கதின்
தாட்டினெருங்கஜெப்புசுனு தாருணிலோசிவரூபதாரிய
மாட்டிகிநுன்னவேமனஸ மானமுயெவ்வருவெர்ரிவேமனு.

(இ-ள்.) அன்னத்திற்கும் ஆடைக்கும் பரதவிக்கும் யேழை யைப்போலவும் சினத்தைப் பற்றறுத்து சாந்தத்தை வகித்து யெந் தயிடத்திலும் அடிக்கடி ஒவ்வொரு சொல்லுக்கும் அளவிறந்தபத் யங்களை வெகு தீரமாக யாவருமறியச் சொல்லிக்கொண்டு இவ்வுல கின்கண் சிவரூபத்தைத் தரித்தவராகி யிருந்த வேமன்னவுக்கு நிகரானவர்கள் யாருமில்லை பைத்தியங்கொண்ட வேமன்னு-எ-று.

ஒக்கடியோகியாயெமரி யொக்கடுதிக்குலத்யாகியாயெ
வேரொக்கடுபோகியாயெ நடுமெயொக்கடுசக்கனிராகியாயெ
தாமொடுக்கடுக்ஞானியாயெ விஞுயொக்கமஹாத்முனிகானமெச்ச
ந்க்கமுபின்னிரூபமுனு நீகுனுசெல்லுசுனுண்டுவேமகு. [டன்

(இ-ள்.) ஒருவன் ரோகியாகி மற்றொருவன், அஷ்டதிக்குக்கும் தியாகியாகி வேறொருவன் போகியாகி இன்னொருவன் மாய்கைக்குள்ளாகி மற்றுமொருவன் க்ஞானியாகினன் இத்தனைபேர்களில் ஒரு மகாத்மாவையேனும் யெவ்விடத்திலுங் காணோம் உண்மையிலே இத்தனை ரூபங்களும் உனக்கே தகுமன்றி மற்றொருவருக்குத் தகாது கேளும் வேமனு-எ-று. (உரு)

அண்டாண்டமுகன யன்னியுன்னடு
பிண்டயண்டமெட்ளு பிரமாண்டமட்லே
கர்மபந்தமுசேத கானருயினருல்
விஸ்வதாபிராம வினரவேமா.

(இ-ள்.) அண்டரண்டத்தைப் பார்க்க் யாவத்தும் யிருப்பது போல பிண்டாண்டமெப்படியோ அப்படியே பிரமாண்டமும் விளங்கும் அந்த ரகசியத்தை கர்மபாசத்தினல் கட்டுப்பட்டமானிடர்கள் யிதை உணர்வது மெத்த அருமையாகும் சர்வவியாபியாகிய ஓ ராமா கேளும் வேமா-எ-று. (உச)

அண்டமுலோயாகாசம்
முண்டங்காரூடகூட நொானநரகதீபை
யுண்டுனுகந்தயுதெலசின
மெண்டுகனுசமுத்திகாந்த மெலகுரவேமா.

(இ-ள்.) இந்தவண்டத்தில் ஆகாயமிருப்பதுபோல ஆக்கையெனும் அண்டத்திலும் ஆகாயமிருக்கின்றது அந்தப் பார்க்கப் பார்க்க இனிப்பாகவிருக்கும் அவ்விடத்தில் சகலமுமுணர்ந்த முக்திமாதொருவள் ஜோதி சொரூபமாய் விளங்குவள் வேமா-எ-று.

பிண்டஅண்டமனெடி ப்ருதிவிஜனுலுகூட
ப்ரமஅண்டமனெடிபயலுகாக
ஆவிதம்புனனருலந்தருதெலியண்டி
விஸ்வதாபிராம வினரவேமா.

(இ-ள்.) பிண்டாண்டமென்னும் பிருதினியை ஜனங்கள்பார்க்கப் பிரமாண்டமெனும் வெளியாகும் அந்த விதமாக யெல்லா மனிதர்களும் தெரிந்து தெளிவையடையுங்கள் சர்வ வியாபியாகிய ஓராமா கேளும் வேமா-எ-று. (உசா)

தனருபிண்டாண்டமுன தகிலினவாடு
புட்டலேதுவாடு புடமிலோன
னட்டிபுட்டுககன னவனிலோலேதயா
விஸ்வதாபிராம வினரவேமா.

(இ-ள்.) ஒளிபெற்று விளங்கும் பிண்டாண்டத்திலகப்பட்டவன் இப்புவியினிடத்திலவன் பிறக்கவில்லை அப்படிப்பட்ட பிறப்பைப் பார்க்க இவ்வுலகத்திலில்லையயா சர்வவியாபியாகிய ஒ ராமாகேளும் வேமா. எ-று. (உஎ)

கமலபவாண்டமு லென்னுசு
விமலபுசுக்ஞானுலெல்ல வீட்சிந்துரயா
விமலம்பை மணமுண்டக
சமமுகபிண்டாண்டமெபுடு சூடரவேமா.

(இ-ள்.) அண்டபிண்ட பிரமாண்டங்களனைத்தையும் சுத்தக் ஞான வைராக்கிய சீலரான பெரியோர்கள் பேதமாக நினைக்காமல் எல்லாவற்றையும் சமமாகவும் சகலமும் பகவானது சொருபமென்று யெப்போதும் பார்க்கக்கடவாய் வேமா. எ-று. (உஅ)

ப்ரஹ்மாண்டமனெடி பட்டணம்புலோபல
ப்ரஹமமுனுதெலியனி ப்ராஹ்ம்யமேல
தனமனம்புதெலிய தானெபோப்ரஃமம்பு
விஸ்வதாபிராம வினரவேமா.

(இ-ள்.) பிரமாண்டமென்னும் பட்டணத்திற்குள்ளே பிரம்மத்தையறியாத பிராமணனேதுக்கு தன்னைத்தானேயறிய நானேயல்லவாபிரமம் சர்வவியாபியாகிய ஓராமாகேளும் வேமா. எ-று.

ஒகப்ரஃமாண்டமு தலசின
ப்ரகடிம்பகரானிவனக பகுலோகமுலன்
விகடம்பை நட்ளுண்டுனு
அகடாமீதாண்டவம்புலட்டனெவேமா.

(இ-ள்.) ஒரு பிரமாண்டத்தை நினைத்தால் அதன் புகழைச் சொல்லமுடியாதென்ன வெகு லோகங்களிலும் அருவறிப்பாகியதைப்போல விருப்பதைப்போல உம்முடைய திருக்கூத்து ஆஹா ஹா என்ன ஆச்சரியத்தை யுண்டாக்குகின்றதோ அப்படியே புகழவுஞ் சொல்லவுந் தரமாகாது வேமா. எ-று. (கூ0)

ப்ராணமுண்டுகாலி ப்ரமாண்டமுனமேனு
மித்ரசந்திரவஂனி நேத்ரசயமு
மரியுதேவுநெருக மஹிமீதனெவரயா
விஸ்வதாபிராம வினரவேமா.

(இ-ள்.) பிராணத்தினிடத்தில் காற்றும்பிரமாண்டத்தினிடத்தில்; தேகமும் சினேகிதனிடத்தில்; சந்திரசூரியர்களும் பொருந்தியிருக்கும் விவரத்தை; உம்மையன்றி மற்றெவர்கள் பிரமசொரூபத்தை யிவ்வுலகத்திலறிய வல்லவர்கள் சர்வவியாபியாகிய ஓ ராமா கேளும் வேமா. எ-று. (௩௧)

ப்ருதிவிகுதககமேகே ப்ருதிவிபைமொலகெத்தெ
மொலகப்ருதிவிகேகே மொகடைசுதுடு
தரணிஜனுலகெல்ல தல்லியுபெண்ளாமு
விஸ்வதாபிராம வினரவேமா.

(இ-ள்.) பூமியில் தண்ணீர் வந்தது மண்ணின்மீது முளையெடுத்தது முளை மண்ணின்மேல் வந்தது இதை யோசிக்குமிடத்தில் கணவனே குமாரனுகியதுபோல உலகத்திலுள்ள ஜனங்கள் யாவருக்கும் அன்னையே மனைவியாவாள் சர்வ வியாபியாகிய ஓ ராமா கேளும் வேமா. எ-று. (௩௨)

பூமிலோனேபுட்டி பூசாரமெல்லனு
தனுவுலோனபுட்டு தத்வமெல்ல
ஸ்வயமுலோனெபுட்டி ஸர்வம்புதானெளனு
விஸ்வதாபிராம வினரவேமா.

(இ-ள்.) பூமியின் சாரம் யாவும் பூமிக்குள்ளாகவே பிறந்தது போல தேகத்தினிடமாக தத்வம் யாவும் பிறக்கும் சுயம்பிற்குள்ளாகப் பிறந்து சகலமுந்தானுகும் சர்வ வியாபியாகிய ஓ ராமா கேளும் வேமா. எ-று. (௩௩)

பூமிவல்லபேரு புண்யஸ்தலமுலாயே
வெலயராள்ளவல்ல வேல்புலாயே
நீள்ளபேருவல்ல நிகிலதீர்த்தமுலாயே
விஸ்வதாபிராம வினரவேமா

(இ-ள்.) பூமியினுலே புண்ணியத்தலமென்று பேருண்டாயிற்று கற்களினுலே தெய்வமென்று பேருண்டாயிற்று தண்ணீரினுலே பற்பல தீர்த்தங்களென்று பேருண்டாயிற்று சர்வ வியாபியாகிய ஓராமா கேளும் வேமா எ-று. (௩௪)

பூதேவி யனகம்ருத்திக
பூதேவதலனவகுனு புட்டினவென்றே
ஆதேவதகே தெலுசுனு
ஆதினியினருலுயெருக ரந்துருவேமா.

(இ-ள்.) பூமாதேவியென்றால் மண் அந்த பூமாதுகளாகவும் தேவதைகளாகவும் பிறந்த வகைகளெத்தனையோவதை கணக்கிட முடியாது இந்த மர்மம் பரப்ரம்ம சொரூபமாக விளங்கும் அந்த தேவனுக்கேதெரியுமென் றிமந்தமதிகளாகியமானிடர்கள்யாவரும் அதிரகசிய மறியமாட்டார்கள் தத்வக்ஞானபரிசுத்த ஆத்மாக்கள் அறிவார்கள் வேமா. எ-று. (௩௫)

ம்ருத்திகயே தனதனுவட
ம்ருத்திதளமெத்திநிலுப மெமதலாதரவுன்
ம்ருத்திகயுன்னதி முடிகி
யெத்தெருவுனுதரணிமகிம யெருகருவேமா.

(இ-ள்.) மண்ணே தன் தேகமாம் அந்த மண்ணினாலேயே கட்க்காலும் சுவரும் மெத்தைதளமும் போட்டுபார்க்க முதலும் ஆதாரமுமாக விருப்பது மண்ணேயானதால் எப்படிப்பட்டவர்களும் மண்ணின் மகிமையை யறியமாட்டார்கள் வேமா. எ-று.

பூதேவியுன் கம்ருத்திக
பூதேவதபுட்டுவிதமு பூஜனுலெருகன்
பூதேவி பாரமாயெனு
ஆதேவதகாதரெவ்வ ரந்துருவேமா.

(இ-ள்.) பூமாதென்றால் மண் அந்தமண் பிறந்தவிதம் இம் மண்ணிலுள்ள ஜெனங்களறிய ஆதாரமாயினுள் அப்படிப்பட்ட அந்த தேவதைக்கு ஆதாரம் யாவரென்பார்கள் வேமா. எ-று.

மண்டிலோனேபுட்டி மண்டிலோனேபெரிகி
மண்டிலோனே திரிகி மனுஜுடாயெ
மன்னுமண்டகல்ப மனுஜுடேதத்வம்பு
விஸ்வதாபிராம வினரவேமா.

(இ-ள்.) மண்ணினிடத்திற் பிறந்து மண்ணின்மீது வளர்ந்து மண்ணின்மேற் றிரிந்து மனிதனுகினான் அப்படிப்பட்ட மண்ணே மண்ணிற்கலக்கும் மனிதனே தத்வக்ஞானியாகும் சர்வ வியாபியாகிய ஓ ராமா கேளும் வேமா. எ-று. (௩௮)

மண்டிலோனேபுட்டி மண்டிலோனேபெரிகி
மண்டிவெடலிபோடு மிண்டிகெகசெ
மிண்டிலோனசுசமு மண்டிலோலேதயா
விஸ்வதாபிராம வினரவேமா.

(இ-ள்.) மண்ணிற்குள் பிறந்து மண்ணிற்குள் வளர்ந்து மண்ணைவிட்டுவெளிப்பட்டவன் விண்ணையடைந்தான் ஆசையால்விண்ணுலக சுகம் மண்ணுலகிலில்லையையா சர்வவியாபியாகிய ஓராமா கேளும் வேமா. எ-று. (நுகூ)

மன்னுகுப்பஜேசி மன்னுலோகோராடி
மன்னுயண்டகுண்ட மகுடிதிருகி
மன்னுமிண்டகல்பி மரியெந்துபோவுனோ
விஸ்வதாபிராம வினரமே.

(இ-ள்.) மண்ணைக் குப்பலாகக் குவித்து அந்த மண்ணின்மீது விழுந்து புரண்டு மண்ணொட்டாவண்ணந் திரிந்து மண்ணை மண்ணிற்கலந்து பின் இந்த ஜீவனெங்குபோகுமோ சர்வ வியாபியாகிய ஓ ராமா கேளும் வேமா. எ-று. (சம)

மண்டிகுண்டவண்டி மாயசரீரம்பு
சச்சுநென்னடைன சாவதாத்ம
கடமுவொக்கடைதெ கதனம்புஜக்கடா
விஸ்வதாபிராம வினரவேமா

(இ-ள்.) மண்பானைபோற்றமாயாமயமாகிய இவ்வாக்கை எத்தனைநாளாகிலும் ஒருநாளைக்குசாகுமல்லாமல் ஆத்மாஎன்னும் சாகமாட்டாது சடமொன்றாகில் ஆகாயமும் ஒன்றுதானு சர்வ வியாபியாகிய ஓராமா கேளும் வேமா. எ-று. (சக)

மன்னுதினகமண்டெ மண்டேருஜனுலரா
மண்டிலோனேமேலு மருவநேல
நீள்ளலோனிமேலு நிகிலமையுண்டுரா
விஸ்வதாபிராம வினரவேமா.

(இ-ள்.) சம்சாரசாகரத்தில் விழுந்து மீண்டுங் கரையேற வகையறியாத பாமர ஜனங்களே மண்ணைத் தின்னுங்களென்றால் மகாகஷ்டப்படுகிறீர்கள் அந்தமண்ணிலிருக்கும்மேன்மையைமரக்கவேண்டியதென்ன தண்ணீருக்குள் மேன்மை அனேகமாயிருக்கும் சர்வவியாபியாகிய ஓ ராமா கேளும் வேமா. எ-று. (சஉ)

மண்டபுட்டுசொம்மு மண்டியந்தின தாச்சி
மண்ட்டிகுண்டலோனே மரலவண்டி
மண்ட்டிப்ரதுகுசிந்த மருலேலஜேஸ்திலோ
விஸ்வதாபிராம வினரவேமா.

(இ-ள்.) மண்ணிற்பிறக்கும் பொருளை அந்த மண்ணினிடத்திலே தானே ஒளித்துவைத்து மறுபடியும் யெடுத்து மண்பானையிடமே சமைத்து அதையுண்டு களிக்கும் மண்பிழைப்புக்கேனிவ்வள ஆசையை யுண்டுபண்ணினீர் சர்வ வியாபியாகிய ஓ ராமா கேளும் வேமா, எ-று. (சஙு)

உச்சகமுலோ பலிதத்வமு
வெதிகியுதானனெதலசி வேகமெமதிலோ
நுதகமுவலெ தாதத்வமு
மதிதெலிசினவாடுதத்வ மயுடரவேமா.

(இ-ள்.) தண்ணீரிலிருக்கும் தத்வத்தைத் தேடி யுணர்ந்து தன்னைத்தானறிந்து தெளிவடைந்து விரைவில் மனதில் மதித்துத் தண்ணீருக்குநிகராக தத்வத்தை மதியிலறிந்தவன் தத்வசொரூபனாகும் வேமா, எ-று, (சச)

நதினுதகம்புலு ஜனுக்ரிய
மதிபொடமெடுதத்வவிதுலு மகிமான்விதுலே
ப்ருதிவினிகல நருலுவொகட
பதபடிஸத்கதினிபொந்து பாருகவேமா

(இ-ள்,) நதியில் தண்ணீர் பெருகிப்போவதுபோல இடைவிடாமல் மதியைத்திருத்தும் தத்வயோகிகள் அளவிடப்படாத மகிமை பொருந்தினவர்களாகி உலகிலுள்ள மனிதர்கள் புகழசாயுச்சியபதவியாகும் சற்கதியை அவசியமடைவர் வேமா, எ-று. ()

நீள்ளமீதபுக்க நிலிசினப்புடு
நீளுவேகவச்சி தாருகாக
விடவருண்டகிந்த விஸ்ராந்துபடுதுரு
விஸ்வதாபிராம வினரவேமா,

(இ-ள்) தண்ணீரின் மீது குமிழி நின்றபோது தண்ணீர் விரைவாக வந்து படுமல்லவா அப்போதந்த குமிழியழிந்துபோகுமாப்போல அழிந்துபோகும் நிலையில்லாத மண்பாண்டையின் பொருட்டு எத்தனையோ ஆயாசப்படுவார்கள் சர்வவியாபியாகிய ஓ ராமா கேளும் வேமா, எ-று, (சரு)

நீள்ளமீதிவ்ராத நிலுவகயுன்னட்ளு
பாட்டிஜகதிலேது பாமுலேது
மாட்டமாட்டசெல்ல மனசுகோருச்சுநண்டு
விஸ்வதாபிராம வினரவேமா,

(இ-ள்,) நீர்மேலெழுத்து நிற்காமலிருப்பதுபோல ஜெகத்துமில்லை பதவியுமில்லை இப்படிப்பட்ட அனித்தியமான இவ்வுலகின் கண்ணுலவும்இவ்வாக்கையும் அனித்தியமேஆகையால் இந்தஅனித்தியமானஜெகத்தாசையை மனதுகோரிக்கொண்டிருக்கும் சர்வ வியாபியாகிய ஓராமா கேளும் வேமா, எ-று, (சுஎ)

நீள்ளமீதஜ-டுடு வெலயனேட்லபர்வு
பைலுமீதஜ-டுடு பக்ஷிபர்வு
ஆடதாணிபர்வு யாலாகெயுண்டுரா
விஸ்வதாபிராம வினரவேமா,

(இ-ள்,) நீரின்மீது பாரு ஓடத்தின் வேகத்தை வெளியாகும் விண்மீதுபாரு பட்சி பரக்கும்வேகத்தை பெண்பிள்ளையின் ஓட்டமும் அந்தப்படியேயிருக்குமடா சர்வ வியாபியாகிய ஓராமா கேளும் வேமா, எ-று, (சஅ)

நீள்ளலோனிசேப நிகுடிதூரமுபாரு
பைட்டமூரனைன பாரலேது
ஸ்தானபலிமிகானி தனபல்மிகாதயா
விஸ்வதாபிராம வினரவேமா,

(இ-ள்,) தண்ணீருக்குள் மீனானது நீண்டு தூலதூரம் ஓடும் வெளியில் ஒரு முழமேனும் ஓடமாட்டாது ஸ்தானபெலமல்லது தன் வல்லமையல்லவையா சர்வ வியாபியாகிய ஓ ராமா கேளும் வேமா எ-று, (சகூ)

நீள்ளலோனிமுஸலி நிகுடியேனுகதிசு
பைட்டகுக்கசேத பங்கபடுனு
ஸ்தானபல்மிகானி தனபல்மிகாதயா
விஸ்வதாபிராம வினரவேமா,

(இ-ள்,) தண்ணீருக்குள் வசிக்கும் முதலையானது தன்னருகில் வந்த யானையைப் பிடித்து உள்ளுக்கிழுத்துப் போகும் அப்படிப்பட்ட முதலை தண்ணீரைவிட்டு வெளியில்வந்த மாத்திரத்தில் நாயினிடமகப்பட்டு பங்கப்படும் இதற்குக்காரணம் ஸ்தானத்தின் வல்லமையேயன்றி அம்முதலையின் வல்லமையன்று சர்வவியாபியாகிய ஓ ராமா கேளும் வேமா, எ-று, (ருய)

மொதடபட்டநீரு மோட்டுதனகயெக்கி
மொநடகுரிகிவேக மொலகலெத்து
மொலகப்ருதிவிபடின மொகசொடுகந்துரு
விஸ்வதாபிராம வினரவேமா,

(இ-ள்,) முதலில் விழுந்த வித்து மோட்டுவரைக்குமேறிமுளையெடுத்து பத்துமாதமும் பூரணமாகி அம்முளை பூமியில் விழுந்த மாத்திரத்தில் ஆண்குமாரனென்று ஜனங்கள் சொல்லுவார்கள் சர்வவியாபியாகிய ஓ ராமா கேளும் வேமா, எ-று, (ருக)

மொதட்டபோயுநீரு மொதலிதனகயெக்கி
வ்ருக்ஷமெல்லநிண்டி விஸ்தரிஞ்செ
ஆவிதம்புனஜீவ மந்தட்டநிலுசுனு
விஸ்வதாபிராம வினரவேமா.

(இ-ள்) பூமியைத்திருத்தி விரைவிதைத்து முதலில் வார்க்குந் தண்ணீர் விதைக்குள்ளேறி முளை யெடுத்து இலை தழைத்து கொம்புகள் ஓடி அம்மரம் முழுதும் நிறைந்துப் பரவியது அதுபோல ஜீவனவ்வண்ணமே நிற்கும் சர்வவியாபியாகிய ஓ ராமா கேளும் வேமா, எ-று, (ருஉ)

நீருகாரமாயெ காரம்புநீராயெ
காரமைனநீரு காரமாயெ
காரமந்துநீரு கடுரம்யமையுண்டு
விஸ்வதாபிராம வினரவேமா

(இ-ள்,) தண்ணீர் காரமாயிற்று அக்காரமேதண்ணீராயிற்று காரமாகிய தண்ணீர் பின்னுங் காரமாயிற்று அக்காரத்தில் நீரானது மெத்தவும் சுந்தரமாக பிரகாசித்துக்கொண்டிருக்கும் சர்வவியாபியாகிய ஓ ராமா கேளும் வேமா, எ-று, (ருங)

நீருகாரமாயெ காரம்புநீராயெ
நீருநிர்விகார வஸ்துவாயெ
நீட்டிலோன நுண்டு நிகலப்ரமாண்டம்பு
விஸ்வதாபிராம வினரவேமா,

(இ-ள்,) ஜலம் காரமாயிற்று காரம் ஜலமாயிற்று அத்தண்ணீர நிர்விகார வஸ்துவாயிற்று அப்படிப்பட்டத் தண்ணீருக்குள்ளாகவிருக்கும் ப்ரமாண்டங்கள் சகலமும் சர்வவியாபியாகிய ஓ ராமா கேளும் வேமா, ச-று, (ருச)

நீருகாரமௌனு நிருகொனிகாரம்பு
வானிவத்தநித்ர போனுவச்சு
நீட்டிலோன நுண்டு நிகிலப்ரஹ்மாண்டமுல்
விஸ்வதாபிராம வினரவேமா.

(இ-ள்,) தண்ணீர்காரமாகும் நீரினிடம் காரங்கொண்ட அதனிடத்தில் ஆனந்த நித்திரைசெய்யலாம் அத்தெளிந்த நீருக்குள் அகில ப்ரம்மாண்டங்களும் நிறைந்திருக்கும் சர்வ வியாபியாகிய ஓ ராமா கேளும் வேமா, எ-று, (ருரு)

ஜ்யோதியந்தெபுட்டு சொம்பைனநாதம்பு
நாதமந்துபுட்டெ நரயபிந்து
பிந்துவந்தெபுட்டெ ப்ருதிவியாகாசம்பு
விஸ்துலதாபிராம வினரவேலா,

(இ-ள்,) சோதியினிடத்திலே பிறக்கும் சுகமாகிய நாதம் அந்த நாதத்தினிடம் பிறக்கும் பிந்து அவ்விந்துவினிடத்திலே பிறந்தது பிருதிவியும் ஆகாசமும் சர்வ வியாபியாகிய ஓ ராமா கேளும் வேமா, எ-று. (ருசு)

ஆத்மலோனிஜ்யோதி யமருடலிங்கம்பு
தெரச்சிகனககானி தேடபடது
யதியுகுருவுலேக யப்புனுதெலியங்க
விஸ்வதாபிராம வினரவேமா,

(இ-ள்,) ஆத்மாவுக்குள் சோதியமர்ந்திருக்க லிங்கமாகும் அதைத்திறந்துப்பார்க்காமலல்லது தெளிவுபடமாட்டாது அப்படி தெளிவுபடுதற்கு எளிதிலாகுமா தெரிந்து ஆனந்தமடைவதற்கு குருவில்லாமல் பிராப்தமாகுமா ஆகமாட்டாது ஆகையால்சத்குருநாதன் கிருபாநோக்கத்தால் எளிதிலடையலாம் சர்வ வியாபியாகிய ஓ ராமா கேளும் வேமா, எ-று, (ருஎ)

சொம்முகனெடிதாக ஜ்யோதிகாவலெகாணி
சொம்முகன்னவெனுக ஜ்யோதியேல
தேவுடைனவெனுக தேகம்புசிக்கேல
விஸ்வதாபிராம வினரவேமா.

(இ - ள்.) காரணப் பொருளைக் காணும்பரியந்தம் சோதிவே ணுமன்றிப் பொருளைக்கண்டபின்பு சோதியேதுக்கு தேவனை பிறகு தேகத்தினிடம் ஆவலேன் சர்வவியாபியாகிய ஓ ராமா கே ளும் வேமா. எ - று. (ரு அ)

சொம்முபட்டினசோட்ட சோதிம்பகலுகுனு
சொம்முலேனிசோட்ட சோதனேல
அஞ்சனம்புலேக யாசொம்முதெலியது
விஸ்வதாபிராம வினரவேமா.

(இ-ள்.) பொருள் போட்டவிடத்தில் தேடக்கிடைக்கும் பொருள் விழாதவிடத்தில் சோதிப்ப தேதுக்கு அஞ்சனம் போட்டுப்பார்க்காமல் அந்தப்பொருள் அகப்படமாட்டாது சர்வ வியாபியாகிய ஓ ராமா கேளும் வேமா. எ - று. (ருகூ)

தீபம்புலேனி யிண்டனு
ரூபம்புலுதெலியலேரு ரூடிகதயலோ
தீபமருதெலிவி கலிகியு
பாபம்புலுமருகுத்ரோவ படுதுருவேமா.

(இ-ள்.) தெளிவில்லாதமந்தமதிகள் விளக்கில்லாதவீட்டினில் சொரூபத்தை உண்மையிலேயே காணமாட்டார்கள் விளக்காகுந் தெளிவுண்டாகிய உத்தம ஞானிகள் பாவங்களுநுமாய்ந்துபுண்ணி யத்தைச் சேகரிக்கும்வழியையே நாடுவார்கள் வேமா. எ - று. ()

சிவுகூர்ச்சி தீபமிடினனு
சிவமந்திரமந்துஜ்யோதி ஸ்திரமகுட்டருதீ
சிவயோகி ஃருதயகமலமு
சிவத்ரிபுவனமுலனுவெலயு ஸ்திரமுகவேமா.

(இ-ள்) மனதுடன் சிவனைக்கூட்டி விளக்கை வைத்தால் அவ் வீட்டிற் சிவமென்னுஞ் சோதியானது நிலைத்துப் பிரகாசித்துக் கொண்டிருப்பதோர் அருமையா அதுபோல சிவயோகியின் இரு தயமென்னுந்தாமரைகமலத்தில் மூவுலகமும்சிவமயமாகவே விள ங்கும் வேமா. எ-று. (சாக)

அனலம்புன ஜன்மிஞ்செனு
யனலம்புனஸலிலயகுச்சு யாகாசமுநன்
கனிபிஞ்சி புட்டுதானே
ஜனகுடுலேனேட்டிமாய சரிதமுவேமா.

(இ-ள்.) அக்கினியில்யாமைபிறந்தது அதெப்படியெனில் அக்கினியில் தண்ணீருண்டாகுமாப்போல ஆகாசத்தினில் காணப்பட்டு தனக்குத்தானே பிறக்கும் தந்தை யில்லாத மாயையின் சரிதை வேமா, எ-று. (சஉ)

அக்னிதைவமைதெ யக்னியுபாஸ்தியு
சேரராணிமுக்தி சேருடெட்லு
வீரபத்ருனிசேத வெலசினயக்னியு
விஸ்வதாபிராம வினரவேமா.

(இ-ள்.) அக்கினிதெய்வமாகில் அந்த அக்கினியை உபாசனை செய்தால் சேரவரிதாகிய முக்தியை சேருவதெப்படி வீரபத்திரனால் உண்டாகிய அக்கினியாகையால் சர்வவியாபியாகிய ஓ ராமா கேளும் வேமா. எ-று. (சஙு)

அக்னிசிகலயந்து நமரங்கமமகார
மபவுமீதத்யான மொனருனிசி
யாகுதிபாகுவெனுக ஹறுனிகற்பிதமௌனு
விஸ்வதாபிராம வினரவேமா.

(இ-ள்.) கொழுந்துவிட்டோடும் அக்னியின்மீது தானுகி நிற்கும் சிவபெருமான்மீதில் நிர்மல தியானத்தை வைத்து ஆகுயாதியாகிய பின்பு அரனுக்கற்புதமாகும் சர்வ வியாபியாகிய ஓ ராமா கேளும் வேமா. எ-று. (சஙச)

கனசாரமக்னி தரிகொனி
கனசாரமுலேனியட்டி காரணவித்யா
கனசாரமுவித்யாக்னிகி
கனசாரமுகண்டகம்பு கனுகுரவேமா.

(இ-ள்.) மிகவும் சாரமாகும் அக்னியை உட்கொண்டு அப்படிப்பட்ட சாரமில்லாத வித்தைக்குக் காரணமும் மேன்மையுமாகியசாராக்னிமுட்களுண்டாகும் வேமா, எ-று. (சஙரு)

தொர்ரமானிலோனி தொரட்டிஜீவுலநெல்ல,
மொல்லலேகஜம்பு முதமுதோட
அக்னிலேனிமண்ட யதியேமிசோத்யமோ
விஸ்வதாபிராம வினரவேமா,

(இ-ள்.) யொந்துள்ள மரத்திற்குள் சொரடு எல்லா ஜீவராசிகளையும் பிரியத்துடன் அக்னியில்லாத சுடர் கொல்லும் அதுவென்ன விந்தையோ சர்வ வியாபியாகிய ஓ ராமா கேளும் வேமா.

நாகுயெவருதிக்கு நடினுளமுலலோனு
வேகுசுக்கவண்டி, வெனுகுதிக்கு
வெனுகுகன்னதிக்கு வெதுகங்கலேதயா
விஸ்வதாபிராம வினரவேமா.

(இ-ள்.) எனக்கு திக்கு யாவரெனில் ஆகாயத்திற்குள் விளங்கும் வெள்ளியை யொற்றப் பிரகாசம் திக்காகும்சோதிக்காகிலுந்திக்கு தேடிப்பார்க்க எங்குமில்லை சர்வ வியாபியாகிய ஓ ராமா கேளும் வேமா-எ-று. (சு௩)

க்ருகமுகூடுஜேசி குணமுமுப்பிரிஜேசி
சத்யமனெடிகர்ம சமுருபோசி
மூலநொக்கஜ்யோதி முட்டிஞ்சிசூடரோ
விஸ்வதாபிராம வினரவேமா.

(இ-ள்.) தேகமென்னும் வீட்டை மாடமாக்கி ராஜசம் தாமசம் சாத்வீகமென்னு மூன்று குணங்களை முப்பிரி நூலாக்கி சத்தியமென்னும் கர்ம எண்ணெயைவிட்டு மூலையிலொரு விளக்கேத்தி அவ்விளக்காகுஞ் சோதியைப்பாரும் சர்வ வியாபியாகிய ஓ ராமா கேளும் வேமா. எ-று. (சு௮)

பிண்டஅண்டமத்ய பிந்துனுத்மஜ்யோதி
ப்ரஃமாண்டமத்ய பானுஜ்யோதி
நாதபிந்துநடுமநதி காத்புதஜ்யோதி
விஸ்வதாபிராம வினரவேமா.

(இ-ள்.) அண்டபிண்டத்திற்கு நடுவில் விந்து ஆத்மாவே சோதியாகும் பிரமாண்டத்திற்கு நடுவில் பருதி சோதியாகும்நாத விந்துக்கு நடுவில் அற்புதமாகிய, அதிக சோதியாகும் சர்வ வியாபியாகிய ஓ ராமா கேளும் வேமா-எ-று. (சு)சு

மன்னுராயிலேனி மஹிமீதனொககோட்ட
கொம்மகலிகியுண்டு கொனலுசாகி
திவ்வெலேனிவெலுகு தீபிஞ்சியுண்டுரா
விஸ்வதாபிராம வினரவேமா.

(இ-ள்.) மண்ணுங் கல்லுமில்லாமல் உலகத்தின்மீது ஒரு கோட்டை கட்டப்பட்டிருக்கின்றது அக்கோட்டைக்கி நீண்ட கிளையுண்டாயிருக்கும் முனையுடன் கூடின அக்கோட்டைக்குள் விளக்கில்லாத பிரகாசம் ஒளி பெற்றிருக்கும் சர்வ வியாபியாகிய ஓ ராமா கேளும் வேமா. எ-று. (எ0)

வாயுவந்தேபுட்டி வாயுவந்தேபெரிகி
வாயுவந்தெமேலு வருஸதெலசி
வாயுவனகபிராண வாயுவுசிவுடயா
விஸ்வதாபிராம வினரவேமா.

(இ-ள்.) வாயுவினிடத்திற் பிறந்து வாயுவினிடமே வளர்ந்து வாயுவினிடத்திலேயே மேலாகிய வரிசைக் கிரமங்களைத் தெரிந்து அப்படிப்பட்ட வாயுவென்றால் அதென்னவெனில்பிராணவாயுவே சிவனாகும் சர்வ வியாபியாகிய ஓ ராமா கேளும் வேமா. எ-று.()

காலிகாலிகூடி கடிகண்டினிகூடி
தோலுதோலுகூடி தொம்பிஜேசி
ஜிட்டுஜிட்டுகூடி ஜீவுண்டுநாயரா
விஸ்வதாபிராம வினரவேமா.

(இ-ள்.) காற்று காற்றைச்சேர்ந்தும் ஆண்பெண்ணைச் சேர்ந்தும் தோலுதோலைச்சேர்ந்து தொந்திரவுபட்டு அதிலிருந்து வெளிப்படும் சுக்கிலசுரோணிதமிரண்டும் ஒன்றுசேர்ந்து ஜிவனாயினன் சர்வவியாபியாகிய ஓ ராமா கேளும் வேமா. எ-று. (எ௨)

காலிகாலிகலசெ ககனம்புகனம்பு
மன்னுமண்டகலசி மண்டமண்டெ
நீருநீருகலசி நிர்மலம்பைனபட்டி
விஸ்வதாபிராம வினரவேமா.

(இ-ள்.) காற்று காற்றிற்கலந்தது ஆகாசம் ஆகாசத்திற்சேர்ந்தது மண்ணு மண்ணிற்சேர்ந்து பற்றியெரிந்தது நீர் நீரிற்கலந்து நிர்மலமாகிய இவ்வுலகின்கண் சர்வவியாபியாகி எங்கும் நிறைந்திருக்கும் ஓ ராமா கேளும் வேமா-எ-று. (எ௩)

ஆகாசம்புன வாய்வு
மாருன தவாக்னிபெட்டுல மானஸமந்தன்
ஏகாகாருடு ஜகமுன
ஜோகைதனுதானெவெலுகு சுண்டுரவேமா.

(இ-ள்.) ஆகாயத்தினிடம் வாயுவுபொருந்திருக்கும் அதெப்படியெனில் மரத்தினிடத்தில் தவாக்னியானது யிருப்பதுபோல மனதினிடத்திலும் உலகமெங்கும் ஏகாகாரமான யீசன் தனக்குத் தானே பிரகாசித்துக்கொண்டிருக்கும் வேமா. எ-று. (எச)

பைலந்தே புட்டுசர்வமு
பைலந்தேலீயமைமே பிர்மாண்டம்புல்
பைலுனுபந்தமு துடிபின
கைலாசமுபாசிமுக்தி கலுகுரவேமா.

(இ-ள்.) வெளியினிடத்திலே சகலமும்பிறக்கும் அந்தவெளியினிடத்திலேயே பிரம்மாண்டங்களும் கலந்திருக்கும் அப்படிப்பட்ட வெளியையும் மண் பெண் பொன்னென்னு மூவர்சையையும் விட்டால் கைலாயத்தைக் கடந்து முக்தியுண்டாகும் வேமா.()

பைலுனபந்தமு புட்டெனு
பைலுலபந்தம்புகலசெ பரிகிம்பங்கா
பைலுனுபந்தமு கலிபின
பைலந்தேமுக்திபட்ட பயலுரவேமா.

(இ-ள்.) வெளியினிடத்தில் ஆசைபிறந்தது அவ்வெளியிலேயே ஆசைகலந்தது இதையோசித்துப் பார்க்க வெளியையும் ஆசையையும் கலந்தால் வெளியினிடமே முக்தியானது வெட்டவெளியாகும் வேமா, எ - று. (எசா)

பைலுன பந்தகெப்பெனு
பைலுனபரமாத்முனகுனு வாஞ்சிதமொப்பென்
பைலுனபந்தமு கலிபின
கைலாசமுபாசிமுக்தி காஞ்சுரவேமா,

(இ-ள்.) வெளியை ஆசைமூடித்து அவ்வெளியினில் பரமாத்மனுக்கும் ஆசை ஒப்பியது அப்படிப்பட்ட அரிதாகிய வெளியில் ஆசையைக் கலந்தால் கைலாயத்தைக்கடந்து முக்தியைக்காண்பர்கள் வேமா, எ-று. (எசா)

ஹைலுபைலுகானு பரிகிம்பஜாலக
பைலுலோனிவாரு பைட்டபடிரி
பைலுலோனிபால பரிகிம்பதத்வமௌ
விஸ்வதாபிராம வினரவேமா.

(இ-ள்.) வெளி வெளியாகும்படி யோசிக்கமாட்டாமல் வெளிக் குட்பட்டவர்கள் அவ்வெளியைக் கடந்து வெளிப்பட்டார் அந்த வெளிக்குள்ளாக மிகவும் யோசித்துப் பார்க்க சுததத்வமாகும் சர்வ வியாபியாகிய ஓ ராமா கேளும் வேமா-எ-று. (எஅ)

பைலுலோனிபைலு பரிகிம்பநேரக
பைடபடிரிபட்ட பகலுகானு
பைலுலோனிபைலு பாவிம்பமுக்திரா
விஸ்வதாபிராம வினரவேமா.

(இ-ள்.) வெளிக்குள்ளிருக்கும் வெளியைக்கண்டுணர கற்காமல் வெளிப்பட்டார்கள் வெட்டவெளியாகவும் வெளிக்குள்ளிருக்கும் அந்தவெளியைப்பார்க்க முக்தியாகும் சர்வ வியாபியாகிய ஓ ராமா கேளும் வேமா, எ-று. (எகூ)

பைலுபில்லுகட்டி பரிகிம்பநேரக
ப்ரமசிதிருகுவாடு பாமருண்டு
பைலுவீடினயதடு ப்ரஃமம்புதரனே
விஸ்வதாபிராம வினரவேமா.

(இ-ள்,) வெளிவீடு கட்டிப்பார்க்க வறியாமல் பிரமித்துத் திரியுமவன் பாமரனாகும் மேற்சொன்னபடி வீட்டைக்கட்டி வெளிப்பட்ட புருடன் தானே பிர்மமாகும் சர்வவியாபியாகிய ஓ ராமா கேளும் வேமா,எ-று. (அய)

ஹைலுலோனிபைலு பரிகிஞ்சிரூடக
பைலுரூபுஜூசிச்சி ப்ரமயனேல
பைலுரூபுலெல்ல பரிகிம்பதத்வமௌ
விஸ்வதாபிராம வினரவேமா.

(இ-ள்.) வெளிக்குள்ளிருக்கும் வெளியைக்கண்டுணராமல் வெளிபுருவத்தைப்பார்த்து பிரமிக்கவேண்டியதென்ன அந்த வெளிக்குள்ளிருக்கும் யெல்லாரூபங்களையும் பார்க்கத் தத்வமாகும் சர்வவியாபியாகிய ஓ ராமா கேளும் வேமா, எ-று. (அக)

பைலுரூபுரூபு பைலுனுகாஜேசி
பைலுரூபுபட்ட பயலுஜேசி
பைலுலோனிபைலு பர்விம்பதத்வம்பு
விஸ்வதாபிராம வினரவேமா.

(இ-ள்.) வெளிரூபத்தில்ரூபத்தை வெளியாகும்படிச் செய்து அந்த வெளிரூபத்தை வெட்டவெளியாகச் செய்து அவ்வெளிக்குள் வெளியைக்கண்டு தெரிசிக்கத் தத்வமாகும் சர்வ வியாபியாகிய ஓ ராமா கேளும் வேமா, எ-று. (அஉ)

பைலுலோனிபயலு பரிகிஞ்சிசூடக
பைலுரூபுசூசி வலச்செசாக
முரிவியந்துமதினி மோகம்புவிட்டரியெ
விஸ்வதாபிராம வினரவேமா.

(இ-ள்.) வெளிக்குள்ளிருக்கும் வெளியைக்கண்டு தெளியாமல் வெளிரூபத்தைப் பார்த்து மோகித்ததல்லாமல் மெத்தவுங் கேவலமாகிய அழுக்குநிடத்தினில் ஆசையை விடந்தவனுயினுன் சர்வவியாபியாகிய ஓ ராமா கேளும் வேமா, எ-று. (அரு)

பைலுப்ரஃமமனுச்சு பாஷிம்புசுந்துரு
பைலுயேலதானு ப்ரஃமமகுனு
ப்ரஃமமைனபைலு பாவமந்துண்டங்க
விஸ்வதாபிராம வினரவேமா.

(இ-ள்.) வெளியை பிரமமென்று மனதிலெண்ணி யிருப்பார்கள் காணவுஞ் சொல்லவுமரிதாகும் பிரமமானவெளியானது மனதினிடத்திலிருக்க அற்பமாகிய வெளி பிரமமாகாது சர்வவியாபியாகும் ஓ ராமா கேளும் வேமா, எ-று. (அச)

பயலேனதியெந்தாயெனு
பயலுகுபாஃமாண்டமுண்கு பட்டெடீதையன்
ரயமுனவலி யெந்தோயனி
பயபடிதுருதானிஜ டை பயலுரவேமா.

(இ-ள்.) வெளியானது யெவ்வளவு பிரமாணமானது அந்த வெளிக்கும் பிரம்மாண்டத்திற்கும் பிரமாண மெவ்வளவாயிற்று யென்று கண்டு தெளியாமல் அப்பப்பா அதுயெவ்வளவோவென்று அதைப்பார்க்க பயப்படுவார்கள் விரைவிலதை உத்து நோக்கில் வெளியாகும் வேமா-எ-று. (அநு)

சனிமிதி திக்குலுப்பயலே
உனிமிதியிண்டிகினிஞ்ரு யெக்குடுபயலே
வினரானிபயலு நடச்சின
கனராயச்சோட்டநேனு கலசிதிவேமா.

(இ-ள்.) திக்குகளெட்டும் வெளியாகி யெட்டுவீட்டிற்கும் ஆறு அதிக வெளியாகி செவியில் கேட்கப்படாத வெளிநடந்தால் பாரும் அவ்விடத்தில் நானுங் கலந்திருப்பேன் வேமா-எ-று. ()

மண்டலமுலுமூடு வரிசூடசூடகா
சந்த்ரசூர்யவஹ்னி ஜெந்துபிதப
தண்டிவெலுகுகானு தரணிகிதைவம்பு
கானுனுண்டுமிகுல கனதவேமா.

(இ-ள்.) மண்டலங்கள் மூன்று அதை யோசித்துப் பார்க்கப் பார்க்கச் சூரியன் சந்திரன் அக்கினி இம்மூவர்களாகும் இவர்களாலுண்டாகும் பிரகாசமானது அற்பமேயாம் மெத்த ஒளியாகவும் உலகிற்கு தெய்வமாகியும் விளங்கும் பரம்பொருளின் பிரகாசத்திற்கு நிகரெந்த ஒளியுமுன்னிற்கமாட்டாது வேமா. எ-று.(அஎ)

சூர்யுனிபொடகன்ன சோலககிகசிஞ்சு
சுக்கலதொரகன்ன சுக்கடெந்து
கலுவதம்மிகாது கலதுயீபூமினி
விஸ்வதாபிராம வினரவேமா.

(இ-ள்.) தாமரை மொக்குகளானது சூரியன் கிரணம்பட்ட மாத்திரததில் மலர்ந்து வெகுசுந்தரமாகவிருக்கும் அல்லிமொக்கானது சந்திரக்கிரணங்கண்ட மாத்திரத்தில் மலரும் வெள்ளி முளைத்தவுடனே உதயகாலமாகும் இம்மூன்று பிரகாசத்தையும் வெட்கிப்போம்படி அதிக ஒளிபெற்று யெங்கும் பிரகாசிக்கச் செய்யும் ஒளியொன்று இவ்வுலகின் கண்ணுண்டுசர்வவியாபியாகிய ஓராமா கேளும் வேமா. எ-று. (அஅ)

அருணவுதயமுலுனு அஸ்தமானமுலெல்லனி
ஜனனமரணமென்னி ஜாதுலெல்லனி
தீனியெருகுயோகி தேரகாடையுண்டு
விஸ்வதாபிராம வினரவேமா.

(இ-ள்,) சூர்யோதயங்களெத்தனை அஸ்தமிப்பதுமெத்தனை ஜனனமெத்தனை மரணமெத்தனை ஜாதிகளெத்தனை இந்த மொத்தத்தை யறிந்தவன் தெளிவாளியாயிருப்பன் சர்வ வியாபியாகிய ஓ ராமா கேளும் வேமா, எ-று. (அ௬)

ப்ரொத்துபொடுசுடெரிகி ப்ரொத்துபோவுட்டெரிகி
ப்ரொத்துகுரும்குதானி போலிகெரிகி
ப்ரொத்துதெலியுநதடெ பொலுபொந்துப்ரம்மம்பு
விஸ்வதாபிராம வினரவேமா.

(இ-ள்.) பொழுதுவிடிவதை யறிந்தும் பொழுது போவதை யறிந்தும் பொழுதுபோகுமதின் திறத்தைப் பகுத்தறிந்து அந்த அரிதாகிய பொழுதின் குறிப்பையறிந்த மகாத்மாவே பிரமத்தில் கலந்து தானே பிரமமாகும் சர்வ வியாபியாகிய ஓராமா கேளும் வேமா எ-று. (௬௰)

ப்ரொத்துபொடுச்சுசோட்டப்ரொத்துநிலிகசோட்ட
ப்ரொத்துக்ருங்குசோட்ட பொலகஸூக்ஷ்சி
ப்ரொத்தெரிகினவாடு பொலுபைனயோகிரா
விஸ்வதாபிராம வினரவேமா.

(இ-ள்,) பொழுது விடியுமிடத்திலும் பொழுது நிற்குமிடத்திலும் ஆராய்ந்துபார்த்து அதனிடத்தில்காணும் சூக்ஷமாகிய பொழுதையறிந்தவன் சரியான யோகியாகும் சர்வ வியாபியாகிய ஓ ராமா கேளும் வேமா, எ-று, (௬க)

எண்டநீடவன்னெ யேகமையுண்டகா
நிண்டுகுண்டலந்து நிதுரஜேஸி
தண்டி தத்வமெல்ல தலபோசிசூடரா
விஸ்வதாபிராம வினரவேமா.

(இ-ள்,) வெய்யல்நிழல் இவ்விரண்டின் வர்னம் ஒன்றாயிருக்கையில் அந்நிறம நிறைந்திருக்கும் பாண்டத்தினிடத்தில் தூங்காமற்றாங்கி அங்கு சித்திர விசித்திரமாக உதிக்கும் அளவிடப்படாத தத்துவங்களையெல்லாம் ஆராய்ந்துபாரும் சர்வ வியாபியாகிய ஓ ராமா கேளும்;வேமா, எ-று, (கூஉ)

எண்டநீடசந்த மெருகநேர்ச்சினவாடு
யுண்டபோடதண்டு யுர்விலோன
திண்டிபோதுயோகி திருதுச்சுநுண்டுரா
விஸ்வதாபிராம வினரவேமா,

(இ-ள்.) வெயிலை நிழலுக்கு நிகராக வறிய் கற்றுணர்ந்தவன் ஒரு நிமைப்பொழுதேனும் இவ்வுலகத்திலிருக்க அசம்மதனாகி ஆரணியத்தையடைவான் கள்ளவேடம்புனைந்து பிரசாத மூர்த்தியாகி துர்க்குணமுடையயோகி இப்பூதலத்தி லுலாவிக்கொண்டிருப்பனேயன்றி உத்தமகுணமுடைய யோகி நாட்டை விரும்பாமல் காட்டையே யடைந்து சுகித்திருப்பார் சர்வவியாபியாகிய ஓ ராமாகேளும் வேமா. எ-று. (கூங)

சந்த்ருநீடனுனிக சத்ககாரவிமீத
நுண்டஜூ-ெச்சிகொரத மண்டஜேசி
வென்னெலங்கலயுட்டெ வெலயங்கமுக்திரா
விஸ்வதாபிராம வினரவேமா.

(இ-ள்.) சந்திரனுடைய நிழலைக்சூரியன்மீது நன்றாயிருக்கப் பார்த்துக் குறைவாக யிருக்கச்செய்து நிலவினிற் கலப்பதேபிரகாசம் பொருந்திய முக்தியாகும் சர்வ வியாபியாகிய ஓராமாகேளும் வேமா, எ-று, (கூச)

சந்தமாமநீட சக்காதனலோன
நுண்டஜ-ெச்சிகேல னூதிபட்டி
வென்னலலபைடனு வெதகநந்தனேமுத்தி
விஸ்வதாபிராம வினரவேமா,

(இ-ள்.) சந்திரனுடைய நிழல் தனக்குள் நன்றாயிருக்கப்பார்த்து அந்நிழலை கையினால் ஊதிப்பிடித்து வெளியில்தேட அவ்வளவிலே முத்தியாகும் சர்வ வியாபியாகிய் ஓ ராமாகேளும் வேமா,

சந்த்ருடன்டிவாடே சாபம்புசேதனு
கனலஹீனவ்ருத்தி கலிகெகதரா
புடமிஜனுலகெல்ல புத்துலட்ளுண்டுரா
விஸ்வதாபிராம வினரவேமா,

(இ-ள்.) சந்திரவனே யொற்றவனே தாரையின்மீது அடங்கா மோகங்கொண்டு அம்மாதினைவிட்டுப்பிரியாமலிருந்தபடியால் பிருகஸ்பதி தீராச்சினங்கொண்டு சந்திரனை நோக்கி அடா சந்திரனே நாளுக்குநாள் உன்னழகாகிய கலைகள் குறைந்து போகக்கடவதென்று சபித்தார் அந்தப்படியே சந்திரனுக்குக் கலைகள் குறைந்துபோகச் சிவபெருமானைச் சிந்தித்து வேண்டிக்கொண்டபடியால் சந்திரனைப் பரமசிவம் தனது சடாபாரத்தில் தரித்துக்கொண்டு சூரியனிடத்திற் சேர்த்துக் கலைகள் விருத்தியாகும்படிக் கிருபைசெய்தார் அச்சந்திரனைப்போல உலகத்திலுள்ள மனிதர்களுக்கெல்லாம் புத்திகள் அப்படிக்கேயிருக்கும் சர்வவியாபியாகிய ஓ ராமா கேளும் வேமா, எ-று,

ப்ரத்யக்ஷமு பூதேவியு
ப்ரத்யக்ஷமுவாவுவக்னி ப்ராணேயும்புல்
ப்ரத்யக்ஷமு ரவிசந்த்ருலு
ப்ரத்யக்ஷமுகானலேரு பதராவேமா.

(இ-ள்.) பிரிதிவு அப்பு தேயு வாயு வாகாசமெனன்னும் ஞ்சஇதப் பிராணனும் சூரியசந்திரர்களையும் கண்ணாரக் காண்கின்றார்கள் இவைகளுக்கெல்லாங் காரணப்பொருளாகிய பரமாத்மசொரூபத்தைக்கண்டு களிப்படையார்கள் உலகத்தினர் வேமா, எ-று.

சுத்தத்ருஷ்டிதெலசி சுக்ருடந்தட்டிவாடு
பட்டலேகமனசு பாரவிடிசெ
கன்னுபோயிதுதனு காகிசந்தம்பாயெ
விஸ்வதாபிராம வினரவேமா.

(இ-ள்.) சுக்கிரனை யொற்றவனே பரிசுத்தமாகிய இரண்டு கண்களினாலும் பார்த்தும் மனதை நிருத்தவாட்டாமல் ஓடவிட்டு மகாவிஷ்ணுவினால் ஒரு கண்கெட்டுக் காகத்தைப்போல ஒரு கண்ணுடையவனாகினான் சர்வ வியாபியாகிய ஓ ராமா மனசைக்கண்களை ஓடவிடாமல் நிருத்திப் பரவஸ்து தெரிசனஞ் செய்துக்கொண்டு சதாகாலமு மிருப்பவனே பிரமமாகும் வேமா, எ-று. (கூஅ)

குருபுகொஞ்சமைதே சுக்கலுநுண்டகா
ப்ராபுவெலுகுலேது பருவுகானு
க்ஞானதீபமுவலெ கன்னுலகுனுதோச்சு
விஸ்வதாபிராம வினரவேமா.

(இ-ள்.) ஆகாயத்தில் தாரகைகள் பிரகாசித்துக்கொண்டிருக்க அவைகளைப் பார்க்கும்பார்வை அற்பமாகில் அத்தாரகைகளும் அற்பமாகவே பிரகாசிப்பதுபோலத் தோன்றும் அதே தாரகைகள் முழுபார்வையினால் பார்க்கப் பூரணமாய்பிரகாசிப்பதுபோல மனக்கண்களினால் பூரணமாக உன்பார்வை நோக்க க்ஞானவிளக்கை யொத்து கண்களுக்குந் தோன்றும் சர்வ வியாபியாகிய ஓ ராமா கேளும் வேமா, எ-று. (௬௯)

குருப்ருகஸ்பதியுனு குணமிஞ்சுகயுலேக
சந்தமாமகிச்சே சாபமபுடு
குருடுகோபமுன கூடதெப்படினைன
விஸ்வதாபிராம வினரவேமா.

(இ-ள்,) சாந்தகுணம் சிறிதுமின்றி பிருகஸ்பதி பகவானனவர் கோபமிருந்து சந்திரனுக்குச்சாபமிட்டார் ஆகையால்குருவே சினமடைய எப்போதகிலும் ஆகாது சர்வ வியாபியாகிய ஓ ராமா கேளும் வேமா, எ-று. (௭௰)

மேகமட்டமைன மஹிநனிஜெருச்சுனு
சித்தமட்டமைன ஸ்திரமுஜெருச்சு
மருபுமட்டமைன மகிமம்புஜெருச்சுரா
விஸ்வதாபிராம வினரவேமா.

(இ-ள்,) விண்ணில் மேகங்கள் குருக்காக சூழ்ந்திருக்கில் சந்திரனுடைய பிரகாசத்தைக் கெடுக்கும் சித்தங் குருக்காகில் திறத்தைக்கெடுக்கும் மரதி குருக்கிடில் மகிமையைக் கெடுக்கும் சர்வ வியாபியாகிய ஓ ராமா கேளும் வேமா, எ-று. (௭௧)

மேதினிலேனிவாதமுனு மிக்குடமைனபலம்புலேறுலே
நாதுகலாலேல்னிமரி நப்புடுமேகமுகப்பதங்கா
போதயுலேகசத்குருனி புத்ருடிகாடு கிதானத்ருஸ்யமா
வாதுலபோகனுண்டுமிக வச்செதெரிங்கியுனுண்டு வேமனா.

(இ-ள்,) உலகத்தின் கண்ணில்லாத வாதங்களும், அதிகமாகிய பலமுமில்லை காற்றில்லாதபோது மேகங்கள் ஆகாயத்திலவ்வளவாக கப்பிக்கொள்ளமாட்டாது அதுபோல சற்குருநாதன் உபதேசமும் சாந்தமும் க்ஞானக் கண்பார்வையும் இல்லாமல் மாணாக்கனும் புத்திரனுமாகமாட்டான் ஆதலால் வாதுக்கு போகாமலிருந்து மேல்வருங்காரியத்தை அறிந்துக்கொண்டிருப்பாய் வேமனா, எ-று, (௯௨)

மேகுனி யாடம்பரமு
மேகமுலேயுருமுமெருமு மெருவடிபிடுகுன்
மேகுனியா னெடிபாவமு
மேகாடம்பரமுதெலிய மேதினிவேமா

(இ-ள்,) இவ்வுலகத்தில் மேகத்தின் ஆரவாரங்களும் அம்மேகத்திற்குள் மின்னலும் பிறகாசமும் இடியும் அந்த மேகத்தில் சாந்துக்கொள்ளுந் தெளிவும் அங்குதோன்றும் ஒலியும் அறிந்துக்கொள்ளுவோம் வேமா, எ-று, (௯௩)

மெருமு மெரயகானு மேகுனிகிபலிமி
கதசிவானகலுகு கணுதிகானு
மெருகுமொயகுன்ன மரிவானலுனுசன்ன
விஸ்வதாபிராம வினரவேமா,

(இ-ள்,) மின்னல் மின்னிட மேகத்திற்கு பலமாகும் அப்பலத்தினால் கணக்கில்லாத மழைபொழியும் அப்படிப்பட்ட மின்னல் மின்னவிடில் ஒருதுளி மழையும் பெய்யமாட்டாது சர்வவியாபியாகிய ஒ ராமா கேளும் வேமா, எ-று, (௯௪)

தளுகுமெருமுஜூச்சி தரலோனஜனுலெல்ல
கத்துலேதுவான கனதகானு
இதுகொயதுசொயனுசு யிகபேடிதந்தரு
விஸ்வதாபிராம வினரவேமா.

(இ-ள்,) பளிச்சென்று மின்னி மறைந்துபோகும் அதுக்கு மின்னலைக்கண்டு உலகத்திலுள்ள ஜனங்களெல்லாம் சிலர் மழை பெய்யுமென்றும் சிலர் மழை பொழியாதென்றும் சிலர் யிதோ பெய்யுமென்றும் சிலர் இனியேது மழையென்றும் சொல்லுவார்கள் சர்வவியாபியாகிய ஒ ராமா கேளும் வேமா, எ-று, (௯௫)

ஸ்வாதிமெருமுஜூச்சி சந்தோஷபடுதுரு
ஸ்வாதிமெருமுயேமி சபலம்மௌனு
மெருமுதினமுராக மேகம்புகுருசனு
விஸ்வதாபிராம வினரவேமா,

(இ-ள்,) சுவாதி நட்சத்திரத்தின் மின்னலைக்கண்டு சந்தோஷப்படுவார்கள் அச்சுவாதிமின்னலினலென்ன மழைபொழியுமா மின்னலும் நாளும்வராமல் மேகங்கள் மழை பெய்யுமா பெய்ய மாட்டாது சர்வ வியாபியாகிய ஓராமா கேளும் வேமா, எ - று,

உருமுலு வுரிமினயப்புடு
சிரமுனபடிமுணுகினட்ளு சித்தமுப்ரமயுன்
தரபிடுகெக்கட படினனு
முரியுச்சுகடச்சிதிமடண்ரு முந்துகவேமா

(இ-ள்,) இடிகளிடித்தபோது சிரத்தில் விழுந்து பிரான்போயினதுபோல சித்தப்பிரமையுண்டாம் இடியானது உலகத்திலெங்கே விழுந்தபோதிலும் ஆஹா இன்று யிடிக்கித்தப்பிப்பிழைத்தேன் என்பர்கள் மூடமதிகள் வேமா, எ-று. (௱௭)

பிடுகுபடினதாவு தடபடகாறுண்டு
பிடுகுபடினகொம்ப நடகசூலு
பிடுகுபடினவானி புண்ணியமேமணவச்சு
விஸ்வதாபிராம வினரவேமா.

(இ-ள்.) இடிவிழுந்த மிடமானது அலங்கோலமாயிருக்குங்கு இடிவிழுந்தவீடு இடிந்துப்போகும் சிரத்தில்இடிவிழுந்தவனுடைய புண்ணியமென்னென்று பகரலாம் சர்வ வியாபியாகிய ஓராமா கேளும் வேமா, எ-று. (௱௮)

பிடுகுணுயரசேத பிகபட்டியந்துலோ
தல்மஷம்புலெல்ல கடகுதீசி
கடமகரமுசேத கலியுகமுணுப்ரோச்சு
கர்மகர்த்தநெருக கதரவேமா.

(இ-ள்.) இடியை உள்ளங்கையில் பிகுவாசப்பிடித்து அதற்குள்ளிருக்கும் அழுக்கையெல்லாம் வெளிப்படுத்தி பரிசுத்தமாகிய அவ்விடி மற்றதையும் கரத்தில் வைத்துக்கொண்டு இக்கலியுகத்தில் காத்திரக்ஷிக்குங் கர்த்தனுகிய பரப்பிரமத்தைக் காணவேணும் வேமா, எ-று. (௱௯)

தனகாந்தியு பயலெல்லனு
தனகாந்தியெயடுகுமடுகு தரபைநுருமுன்
தனகாந்தியு பயலெல்லனு
தனகாந்தியெதலபுவலன தகுஹுரவேமா.

(இ-ள்.) இடையின் தன் பிரகாசமே வெளியெல்லமாநிறைந்திருக்கும் அவ்விடியின் பிரகாசமே மண்ணும் விண்ணும் நிரைந்திருக்கும் அந்த யிடியின் ஒளியினால் தன் மனதிலும் பிரகாசித்துக்கொண்டிருக்கும் வேமா, எ-று. (௱௧0)

வானுராகடம்ரியு ப்ராணம்புபோகட
கானபடதுயெந்த கனுனிகைன
கானபடினமீதி கலியெட்ளுநடுசுரர்
விஸ்வதாபிராமவினரவேமா,

(இ-ள்.) மழைவருவதும் பிராணன் போவதும் எப்படிப்பட்டகனவானுக்காகிலுங் காணப்படமாட்டாது அப்படியல்லவென்று ஒருக்கால் காணப்படுமாகில் அம்மகாத்மாவினிடம் கலியின் மாய்கை என்ன செய்யும் ஒன்றும் செய்யமாட்டாது சர்வவியாபியாகிய ஒ ராமா கேளும் வேமா, எ-று. (௱௧௧)

வானனுதடி யனிவாருனு
பூனுகவேமன்னசேத பொரயனிவாருன்
நானுதிக்குல வெதகின்
கானமுவானியந்தவானி கதராவேமா.

(இ-ள்,) மழையினில் நனையாதவர்களையும் வேமன்னுவினால் கழிக்கப்பட்டவர்களையும் நானுதிக்குகளில் தேடியும் மேற்கண்ட மழையை யொற்றவளைக் காண்பதறிதாகும் அல்லவா வேமா,

வானகுறுவகுன்ன வச்சுனுக்ஷாமம்பு
வானகுறுசிதேனி வருதபாரு
வருதகருவுரெண்டு வருசதோநெருகுடீ
விஸ்வதாபிராம வினரவேமா.

(இ-ள்.) மழைபெய்யாமலிருந்தால் உலகத்திற்குக் கரிப்புண்டாகும் காலத்தில் மழைபெய்யுமாகில் வெள்ளம் பெருக்கெடுத்தோடி உலகம் க்ஷேமமடையும் ஆகையால் க்ஷேமம் க்ஷாமமிரண்டையும் வரிசைக்கிரமமாக அறந்துக்கொள்ளக்கடவீர்கள் நேசர்களே சர்வ வியாபியாகிய ஒராமா கேளும் வேமா. (௱௧௩)

சமுத்ரமுனகுஜ்டே சரியேதியுனுலேது
அட்டிஜலதிநீரு ணனுவுகாது
அனுவுகானிநீரு யதியேமிசேயனு
விஸ்வதாபிராம வினரவேமா.

(இ-ள்.) கரைகாண்ப தறிதாகியுங் கணக்குக்கடங்காததாகியும் அபராதமாகியும் பூமிவளைத்துக்கொண்டிருக்குங் கடலைபற்றி யோசிக்குமிடத்தில் அக்கடலுக்கு சரியான கனம்பொருந்தியது யெதுவுமில்லை அப்படிப்பட்டக் கடல்ஜலம் உப்பேயல்லது இனிப்பாகமாட்டாது அந்த இனிப்பில்லாத தண்ணீரானதை யேது செய்வதற்கு சர்வவியாபியாகிய ஓ ராமா கேளும் வேமா, எ-று, ()

ஓடசத்வமெல்ல நடிசமுத்ரமுலோன
பண்டிசத்வமெல்ல பைட்டனுண்டு
ஆடதானிசத்வ மேடனேஜேடரா
விஸ்வதாபிராம வினரவேமா.

(இ-ள்.) கப்பலின் ஓட்டமெல்லாங் கடலுக்குள்ளும் வண்டியின் ஓட்டமெல்லாம் பூமியின்மீது யிருக்கும் பெண் பிள்ளையின் ஓட்டமானது யெங்கோ அதைக் குறிப்பிட்டுப் பாரும் சர்வவியாபியாசுய ஓராமாகேளும் வேமா, எ-று. (௱௬௫)

வேயவேயகானு வித்தனமனுபிஞ்சு
வேயவேயப்ரப விருக்ஷமகுனு
தெலியதெலியுவாடு தேவுடனர்தகு
விஸ்வதாபிராம வினரவேமா.

(இ-ள்.) போடப்போட வன்றே விரையெனத் தோணும் அவ்விரை போடப்போடச் செழித்துத் தழைத்துப் பெருத்தமரமாகும் இந்த மர்மத்தைத் தெளிவாகத் தெரிந்துக்கொண்டவனைத் தேவனெனத்தகும் சர்வவியாபியாகிய ஓராமா கேளும், வேமா.

வித்துமொக்கைநேனிவ் ருத்திகானேரது
வித்துசக்கனுன்னவ் ருத்தியகுனு
வித்துவிஸ்வகர்ம விவரிஞ்சிகூடரா
விஸ்வதாபிராம வினரவேமா.

(இ-ள்.) விரைமழுங்கின தாகில் முளைத்து செழிக்கமாட்டாது அதுவே விரைமழுங்காமல் நன்றாயிருக்குமாகில் முளைத்து செழித்துத் தழைத்தும் பருத்தமரமாகும் ஆகையால் அவ்விரையை தீர்க்கமாக யோசித்துப் பார்க்க விஸ்வகர்ம்மாவென்று சொல்லத்தகும் சர்வவியாபியாகிய ஓ ராமா கேளும் வேமா. எ-று. ()

செட்டந்து வித்துபுட்டெனு
அட்டாவித்துனனு செட்டியமரகபுட்டென்
செட்டுனுவித்து ரெண்டுனு
புட்டின்மதிதெலியவலெனு புவிலோவேமா.

(இ-ள்.) செடியினிடத்தில் விரைபிறந்தது அந்த விரையினிடத்தில் செடிபிறந்தது ஆகையால் அந்த செடியும் விரையு மிரண்டும் இவ்வுலகினிற் பிறந்த அதிசயத்தைக் கண்டு தெளியவேணும் வேமா. எ-று. (கந அ)

செட்டுமுதனுலேது செலகிகொம்மனுநால்கு
பட்டபைடமானு பண்ளுபண்டு
தினகனெசவிலேது தீபுனுபஹு மெண்டு
விஸ்வதாபிராம வினரவேமா.

(இ-ள்.) செடி முதலேயில்லை அப்படிப்பட்ட செடியில்தழைத்தும் செழித்துவிளங்கும் கொம்புகள் நான்குளது அந்தசெடியில் வெட்டவெளியாகக் கனிகள்பழுக்கும் அக்கனியைப் புசித்தமாத்திரத்தில் உருசியில்லை அந்தக்கனியைப்புசிக்கும் விதத்தைத் தெரிந்து புசிக்க அளவில்லாத இனிப்புண்டாகும் சர்வ வியாபியாகிய ஓராமா. கேளும் வேமா-எ-று. (கககூ)

செட்டுநந்தெபுட்டு செலரேகிகாயனு
தனரக்கதிசேத தரகவலயு
வண்டிதினகநா யெவர்னம்புதெலியுடீ
விஸ்வதாபிராம வினரவேமா.

(இ-ள்.) செடியினிடத்திலே பிறக்கும் செழுமையான காய்கள் அக்காய்களைக் கத்தியினாலே அறிந்து சமைத்துப் புசிக்க வாபித்து அதனுடைய வர்ன்னத்தைத் தெரிந்துக் கொள்ளுங்கள் சர்வவியாபியாகிய ஓ ராமா கேளும் வேமா. எ-று. (கஉ0)

செட்டுமொதட்டிபாலு சிவுனிகண்டனுநீசி
செட்டுமொதட்டபோசி சிவுனிகொலச்சி
செட்டுவலெனெயுண்டெ சாவெட்ளுகலுகுரா
விஸ்வதாபிராம வினரவேமா.

(இ-ள்.) செடியின் முதற்பாலே சிவனுடைய கண்களினிடத்தில் எடுத்து செடிக்கி முதலில் வார்த்து அச்சிவபெருமானைத்தொழுது அச்செடியைப்போல விருந்தால் சாவெப்படி யுண்டாகும் சர்வ வியாபியாகிய ஓ ராமா கேளும் வேமா. எ-று. (கஉக)

முஷ்டிவேபசெட்டு மொதலுகாப்ரஜலகு
பரகமூலிக்லகு பனிகிவச்சு
நிர்த்தயாத்மருண்டு நீச்சுடெந்துனகுனு
பனிகிராடுஷதற பரகவேமா.

(இ-ள்.) வேப்பன் கெச்சை கண்டங்கத்திரி எட்டிமுதலான செடிகள் மெத்த கசப்பாயிருக்கினும் அவ்வஸ்துக்கள் மனிதர்களுக்குப் பலவித வியாதிகளுக்கு மூலிகைகளாய் உபயோகமாகும் சற்றேனுந் தயாளமில்லாத ஆத்மாவானவன் யேதுக்கும் உபயோகப்படமாட்டான் சீர்வவியாபியாகிய ஓ ராமாகேளும் வேமா. ()

சித்தமனெவேரு சிதில்மைனப்புடெ
ப்ரக்ருதியனெடிசெட்டு பஸ்மமௌனு
கோரிகலனியேட்டி கொம்மலுனுண்டுனெ
விஸ்வதாபிராம வினரவேமா.

(இ-ள்.) சித்தமென்னும் வேரானது அற்றுப்போனபோதே மாயையென்னுஞ் செடி பஸ்பமாகும் அந்த மாயை பஸ்பமானவுடனே கோரிக்கையென்னுங் கொம்புகளு மிருக்குமா இராது சர்வவியாபியாகிய ஓ ராமா கேளும் வேமா. எ-று. (கஉ௩)

மானுலோனனக்னி மரியுண்டகாவச்சு
அக்னிலோனிமானு கலவிகாது
மானுலோனனக்னி மரியுண்டுசம்சாரி
விஸ்வதாபிராம வினரவேமா.

(இ-ள்.) மரத்திற்குள்ளாக அக்கினி பொருந்தி யிருக்கலாம் அக்கினிக்குள்ளாக மரமிருக்கத் தரமாகாது ஆகையால் சம்சாரியானவன் இல்லறத்தி லிருப்பதெப்படியாகு மென்றால் மரத்திற்குள்ளே அக்கினி யிருப்பதுபோலாகும் சர்வ வியாபியாகிய ஓராமா கேளும் வேமா எ-று. (கஉச)

மர்குன னலமுபுட்டினு
மாகொருகதுயனலமுனிகி மனுஜுலுமரிதர்
மர்குலுநனலமு வலெனே
காகாரினயோகியுண்டு கதாரவேமா.

(இ-ள்.) மரத்தினில் அக்கினிபிறக்கும் அவ்வக்கினியின் யிருப்பை மரமறியமாட்டாது அக்கினி மரத்திற் பிறப்பதும் அம்மரமானது அக்கினி தன்னிடமிருக்கும் இருப்பை யறியாததுபோல மனிதர்கள் சம்சாரத்திலிருக்கும் சுகதுக்கங்களை யறியமாட்டார்கள் அன்றியும் இம்மர்மத்தை சூடுதணிந்த யோகியறிந்து அன்னிலையைவிட்டுப் பிரியமாட்டார் வேமா. எ-று. (கஉ௫)

மாதுகாலவேசி மஹிமீநகொகஜாண
பூனிதிருகுசுண்டு பொரந்துகானு
காலிநட்டிமானு கடுரம்யமையுண்டு
விஸ்வதாபிராம வினரவேமா.

(இ-ள்.) உலகத்தினிலொரு காமியாகியப் பெண்மரத்தையெரியப்போட்டு அம்மரத்தைக் கையிற்பிடித்து திரிந்துக் கொண்டு பொருந்தமா யிருப்பன் எரிந்துபோவு மரமானது பார்க்கமெத்த சுந்தரமாக விருக்குஞ் சர்வ வியாபியாகிய ஓ ர்மாகேளும்வேமா.

மொதட்டிதருவுநந்து மூடுகொம்மலுபுட்டெ
அசலுகொனலுதீகே லாகுலமரெ
புவுலுபிந்தெலெல்ல புவனமுல்நிண்டெரா
விஸ்வதாபிர்ரம வினரவேமா.

(இ-ள்.) முதற் செடியினிடத்தில் மூன்று கொம்புகள் பிறந்தது அக்கொம்புகளில் கொழுந்தும் நுனியும் இலைகளும் கொடிகளும் பூவும் பிஞ்சுகளும் மூவுலகங்களிலும் நிறைந்திருக்கின்றன சர்வவியாபியாகிய ஓ ராமா கேளும் வேமா. எ-று. (கஉஎ)

ஆகுகானவச்சு ஹரிஹராதுலகைன
கொம்மகானராது கோரிரூட,
கொம்மகானராக கொனியாடகுந்தூரா
விஸ்வதாபிராம வினரவேமா.

(இ-ள்.) சகலரும் இலையைக் காணலாகும் அவ்விலைகளுக்கு ஆதாரமாகிய கொம்பை பிர்மா விஷ்ணு மயேசுவர்ன் முதலானோரும் காணவரிதாகும் அந்த கொம்புகளைக் காணமல் கொண்டாடாமலிருப்பர்களா உலகிலுள்ள மனிதர்கள் சர்வ வியாபியாகிய ஓ ராமாகேளும் வேமா-எ-று. (கஉஅ)

மொதட்டபோயுநீரு முந்துபீஜமுசெக்கி
மொதலகுரிகிவேகு மொலகலெத்து
மொலகப்ருதிவிபெரிகி வெலயுனுவ்ருட்சாலு
விஸ்வதாபீராம வினரவேமா.

(இ-ள்.) முதலில் வார்க்குந் தண்ணீர் முன்னம் விரைக்கேரி அவ்விரையூரி விரைவில் முளையெடுக்கும் அம்முளையானது உலகினில் வளர்ந்து அந்த மரத்தின் விரைகளினுல் அனேக தருக்களுண்டாம் சர்வ வியாபியாகிய ஓ ராமா கேளும் வேமா. எ-று. (கஉகூ)

ஸ்தாவர முலபட்சிந்தூரு
பாவிம்பகஜகதிவாரு பஹு வீதருசுலன்
ஆவலிதம லோதாமே
தீவரபடிதம்முதாமெ திந்துருவேமா.

(இ-ள்.) இவ்வுலகத்தவர்கள் பலவித காய்கனிகளையும் பல ஜாதி மிருகங்கள் நீர்வாழ்வன பரப்பன முதலான் வெகு ஜீவன்களைப் புசிப்பார்கள் ஏனெனில் அதுகளினிடத்தில் வெகுவாகிய உருசிகளிருக்கின்றபடியாலும் பிரியமாகப் புசிப்பதன்றியுந் தங்களைத் தாங்களே தீவரப்பட்டு தின்பார்கள் வேமா. எ-று. (கங௦)

கதலனிஜீவமு லன்னியு
துதமொதலுகனுறுருச்சுல தொலககயுண்டுன்
கதலெடிஜீவமு லன்னியு
கதல்ககஷ்டம்புவெளனு வசுதலோவேமா.

(இ-ள்.) எல்லா ஜீவன்களும் உலகத்திலுண்டென்றும் அது களினிடத்தில் அறுசுவைகளும் நீங்காமலிருக்கும் தவிர அசையும் படியான எல்லா ஜீவன்களும் அசையாமலிருக்குமாகில் அதுகளுக்குக் கஷ்டங்களாகும் வேமா. எ-று. (௩௩௧)

கொண்டலெல்லமோயு மெண்டைனகபிசேன
தண்டுஜேசெராம தரணிவிபுடு
லங்கயேலெநொகடு லட்சுமிகடாக்ஷான
விஸ்வதாபிராம வினரவேமா.

(இ-ள்.) இப்பூதலத்திற்குச் சக்கரவர்த்தியாகிய ஸ்ரீராமசந்திரமூர்த்தி காட்டில் வசிக்கும் வானரசேனைகளை பதாதிகளாகக் கூட்டிக்கொண்டு சென்று அவ்வானரங்களால் அளவிறந்த மலைகளை தருவித்து கடலில் அணைகட்டி இலங்கையைக் கட்டிராவணாதி ராக்கதர்களை மடித்து இலங்கையை லட்சுமிகடாக்ஷம்பெற்ற விபீஷணர்க்கு பட்டங்கட்ட அதை யாண்டானவன் சர்வவியாபியாகிய ராமா கேளும் வேமா. எ-று. (௩௩௨)

புடமினிகல நடஜீவுலு
படபாக்னியுதீவுலகுனு பாரொடியொடலுன்
ஜடமுனகூடின யப்புடெ
கடனுபிரளகனெடு வஸ்துகல்குனுவேமா.

(இ-ள்.) இவ்வுலகிலுள்ள நடைஜீவன்களும் வடவாமுகாக்கினி யிருக்கும் தீவுகளுக்குப் போகும் பரவைகளின்உடலும் சடலத்தில் கூடினபோதே முடிவில் பிரளயமென்னும் வஸ்து உண்டாகும் வேமா. எ-று. (௩௩௩)

நடஜீவுல ஸ்தாவரமுலு
வடிச்சனிபோவங்லனெரிகி பாவமுலோனே
விடுவகப்ரம்ம முதலச்சரு
வடிச்சனிபோகுந்துரோமோ வசுதலோவேமா.

(இ-ள்.) நடப்பன பறப்பன முதலான சகல ஜீவன்களும் நாம் பார்த்துக்கொண்டிருக்கிறபோதே அழிந்துபோவதை யறிந்தும் மனதிற்குள்ளே சதா பிரமத்தை நிஷேக்கமாட்டார்கள் பூதலத்திலுள்ள ஜனங்கள் அப்படித் தாங்கள் மரணமடையாதிருப்பார்களென்னமோ வேமா. எ-று. (௩௩௪)

கொண்டகுதரமன்ன குண்டபாண்டவமன்ன
உப்புலவணமன்ன யொகட்டிகாதெ
பாஷலெஞ்னியைன பரதத்வமொக்கட்டே
விஸ்வதாபிராம வினரவேமா.

(இ-ள்.) மலையைக் கொண்டயென்றுலும் பாண்டத்தைக்குண்டயென்றுலும் உப்பை லவண மென்றுலும் ஒன்றல்லவோ பாஷைகள் பலவாகிலும் பரதத்வமொன்றேயாம் சர்வ வியாபியாகிய ஓ ராமா கேளும் வேமா-எ-று. (௧௩௫)

யமுனிபாததீரி யப்புடுவெடலியு
சமமுசந்திரகளனு ஸரகஜீவி
க்ரமமுகானுஜேரி காலமேகமுநுண்டி
சினுகுகானுவ்ராலு க்ஷிதினிவேமா.

(இ-ள்.) யாதனு சீரத்தைப் பெற்று யமதண்டனேயே யடைந்து வெளிப்பட்ட பிராணனுனது மூலம் பிரகிருதியிற் சேர்ந்து சிலகாலம்மெழுகுண்டையிலொட்டிய அணுப்பிரமாணமகாவிருந்து பெருங்காற்றினுல் அப்பிராணனது மூலப்பிரகிருதியை விட்டு மேகத்திற் சேர்ந்து அம்மேகத்திலிருந்துதூத்தலாக உலகத்திலுதிரும் வேமா, எ-று. (௧௩௬)

அடவிலோனலேது ஆகாசமுனலேது
யரயலேதுதீர்த்த யாத்ரலந்து
ஒடலுசுத்திஜேசி யொடயுனிஜடரா
விஸ்வதாபிராம வினரவேமா.

(இ-ள்.) பரப்பிரமம் காட்டிற்குள்ளேயுமில்லை விண்ணுலகத்திலுமில்லை தீர்த்தயாத்திரை செய்யுமிடத்திலுமில்லை உடலைசுத்தஞ்செய்து உடையவனுகிய பரப்பிரமத்தைப் பாரும் சர்வ வியாபியாகிய ஓ ராமர் கேளும் வேமா. எ-று. (௧௩௭)

சினுதுலுபடி தாமொலச்சின
கனதரமுகஸ்வரூபு காச்சினவென்னோ
மனுஜுலு தினகாநப்புடு
கனயிந்திரியமுலகுப்ராந்தி கலுதுரவேமா.

(இ-ள்.) மழைத்துளிகள் விழுந்து தான் முளைத்த பல விருக்ஷங்களில் நின்றும் கனிகளும் நவதானியங்களும் இன்னும் பல வஸ்துக்களையும் மனிதர்கள் தின்றபோது இந்திரியத்தில் கலந்து ஸ்ரீயினிடத்தில் மோகமுண்டாகும் வேமா. எ-று. (கௗ௮)

இந்த்ரியமுலப்ராந்தி யீரேடுஜகமுலு
மந்துபெட்டிநட்டி மருவுவலென
பொந்துசுகமுசேத புத்ருலகாஞ்சிரி
சகலஜனுலுயிட்ளு ஜகதிவேமா.

(இ-ள்.) இந்திரிய புஷ்டியினால் காமமதிகரித்துமருந்துவைத்ததை யொத்து யீரேழுலோகத்தில் வசிக்குஞ் சகல ஜனங்களும் மோகமீரினவர்களாகி ஸ்ரீகளைக் கூடியணையுஞ் சுகத்தினால் புத்திரர்களைப் பெற்றார்க ளிந்தப்படி ஜெகத்தினில் வேமா. எ-று. ()

இஹமுநந்துபுட்டி யிம்பாருச்சுன்னட்டி
ஜனுலும்ருகமு பக்ஷிஸ்தாவரமுலு
ஜங்கமாதுலனுட்ட ஜகதிலோபவகோட்டி
விஸ்வதாபிராம வினரவேமா.

(இ-ள்.) இப்பூதலத்தினிற் பிறந்து இன்பமடைந்திருக்கும் படியான மனிதர்கள் மிருகங்கள் பறவைகள் தாவரஜங்கமாதிகளென்னும் பிராணிகள் ஜெகத்தினிற்பல கோடியாம் சர்வ வியாபியாகிய ஓ ராமா கேளும் வேமா, எ-று (கசு0)

அண்டஜமுலுபுட்டு யலருப்ராணுலுகொன்னி
புத்புதமுலுபுட்டு புருஷுலுகொன்னி
ஸ்வேதஜமுலுபுட்டு ஜீவுலுகொன்னிரா
விஸ்வதாபிராம வினரவேமா.

(இ-ள்.) அண்டஜங்களிற் பிறக்கும் பிராணிகள் சிலது புத்புதங்களிற் பிறக்கும் புருஷர்கள் சிலது ஸ்வேத ஜனங்களிற் பிறக்குஞ் சீவன்கள் சிலது சர்வவியாபியாகிய ஓராமா கேளும் வேமா.

புட்டிசச்சுநருலு பூர்வமுதெலியக
பட்டபயலுனுண்டு ப்ரமசியிபுடு
தெலிவிவிசிம பூமி திருகங்கனேட்கிடி
விஸ்வதாடிச்ராபிராவினரவேமா.

(இ-ள்.) பிறந்து மரிக்கும் மனிதர்கள் ஆதியிருப்பை யுணராமல் வெட்ட வெளியிலிருந்தும் பிரமித்துத் தெளிவைவிடுத்து இப்போது மாய்கைக்குள்ளாகித் திரிவதேதுக்கு சர்வ வியாபியாகிய ஓ ராமா கேளும் வேமா. எ - று, (கசஉ)

ம்ருகமும்ருகமுலனுச்சு ம்ருகமுலதூஷிஞ்சு
ம்ருகமுகன்னசெடுகு மூர்க்குடௌனு
ம்ருகமுகன்னகுணமு மூர்க்குனகுனுலேது
விஸ்வதாபிராம வினரவேமா.

(இ-ள்.) மிருகம் மிருகங்களென்று மிருகங்களை தூஷிக்கும் மனிதன் மிருகத்திற்காகிலுங் கெட்ட மூர்க்கனுவான் அம்மிருகத்திற்காகிலும் மேலான குணம் மூர்க்கனுக்குமில்லை சர்வ வியாபியாகிய ஓ ராமா கேளும் வேமா. எ-று. (கசங)

ம்ருகமுநருலகுநில மேலுகாபசுவுலு
பாலுபிண்டதுன்ன பர்கபுட்டி
கஷ்டபடுனுகானி கர்மமீடேரக
விஸ்வதாபிராம வினரவேமா.

(இ-ள்.) இவ்வுலகத்தில் மனிதர்களுக்கிாகிலும் மிருகங்கள் மேன்மையாக விளங்கும் அதெப்படியெனில் பசுக்கள் பால்கரக்கவும் எருதுகள் வயல்களை விழவும் பிறந்து கஷ்டப்படுமல்லாமல் கர்மத்தை யொழிக்காமல் சர்வ வியாபியாகிய ஓ ராமா கேளும் வேமா. எ-று. (கசச)

எத்துகைனகானி யேடாதிதெல்பிதே
மாட்டதெலிநடுச்சு மர்மமெரிகி
மொப்பதெல்பராது முப்பதேண்ளகுனைன
விஸ்வதாபிராம வினரவேமா.

(இ-ள்.) நான்கறிவுடைய எருதையாகிலும் ஒருவருடகாலம் பழக்கினுல் சொல்லையறிந்து நமதிஷ்டத்தைப்போல மர்மத்தையுணர்ந்து நடக்கும், முப்பதுவருடகாலம் துஷ்டாத்துமனுக்குப் பலவாறு யோதியபோதிலும் வழிப்படமாட்டான் சர்வ வியாபியாகிய ஓ ராமாகேளும் வேமா. எ-று. (ாசரு)

எத்துமொத்துகேல யிலவேதசாஸ்த்ரமுல்
முக்தராநுகேல முசலிமகடு
சலிதிலேனியிண்ட சம்சாரமிதியேல
விஸ்வதாபிராம வினரவேமா.

(இ-ள்.) எருதைப்போன்ற ஞானசூனியனுக் கிவ்வுலகத்தில் வேதசாத்திர புராணங்க ளேதுக்கு யெவ்வனமாதுக்கு வயது சென்ற கிழமாப்பிளை யேதுக்கு பழையமுதில்லாத வீட்டில் சம் சாரமேதுக்கு சர்வவியாபியாகிய ஓ ராமா கேளும் வேமா. (கசசு)

ஆவுபாலுசிவுனி கபிஷேகமுனகௌனு
ஆவுபாலுஜூட யௌஷதம்பு
ஆவுபாலுநுன்ன அதிசயமெருகுடீ
விஸ்வதாபிராம வினரவேமா.

(இ-ள்.) பசுவின்பால் சிவபெருமானுக் கபிஷேகத்திற்காகும் அப்பசுவின்பாலே அவிழ்தத்திற் குபயோகமாம் அப்படிப்பட்ட பசுவின்பாலிலிருக்கும் அதிசயத்தையறிந்துக் கொள்ளுங்கள் சர்வ வியாபியாகிய ஓ ராமா கேளும் வேமா. எ-று. (கசஎ)

கங்கிகோவுபாலு கரிட்டெனைனுசாலு
கடவ்டைனநேல கஜமுபாலு
பக்திகலுகுகூடு பட்டேசாலுரா
விஸ்வதாபிராம வினரவேமா.

(இ-ள்.) காசிதீர்த்தமும் பசுவின்பாலும் ஒருகரண்டிகிடைத் தாலும்போதும் யானையின்பால் ஒரு மொடாகிடைக்கினும் யேது க்கு அதுபோல பிரியத்துட னளிக்கும் அன்னம் ஒரு கவாளமே போதும் பிரியமின்றி குரோதத்துடன் ஒரு பானையன்னம் பரி மாரின போதிலும் பிரயோஜனமேயில்லை சர்வவியாபியாகிய ஓ ராமா கேளும் வேமா. எ-று. (கசஅ)

கொட்டுடடாவுபிதுக குண்டகொம்போயின
பாலுயீகதன்னு பண்ளுவூட
லோபிவானிகடுக லாபம்புலேதயா
விஸ்வதாபிராம வினரவேமா.

(இ-ள்.) மலட்டுப் பசுவைக்காக்கப் பாண்டங்கொண்டு போனால் அப்பசுவு பால்கொடாமல் பல்லுதிரவுதைக்கு மாப்போல லோபியானவனை யாசிக்க சொற்பலாபமேனு மில்லையையா சர்வ வியாபியாகிய ஓ ராமா கேளும் வேமா. எ-று. (கசகூ)

பசுல்ரூபுவேரு பாலொக்கவர்னமௌ
புஷ்பஜாதிவேரு பூஜயொகட்டெ
தர்சனம்புலுவேரு தைலம்புவொக்கட்டே
விஸ்வதாபிராம வினரவேமா.

(இ-ள்.) பசுக்களின்ரூபங் கருப்புவெள்ளை சிகப்புயென்னும் பலவிதமா யிருக்கினும் பாலின்வர்னம் ஒன்றேயாகும் மல்லிகை முல்லை கோங்கு மந்தாரை சம்பங்கி செலசப்பங்கி யென்று பலவித புஷ்ப்பஜாதிகளிருக்கினும் பூசையொன்றேயாம் பகவானுடைய தெரிசனங்கள் வெவ்வேறாயிருக்கினும் தெய்வம் ஒன்றேயாம் சர்வ வியாயியாகிய ஓ ராமா கேளும் வேமா. எ-று. (கரு௦)

ஒடலுநல்லனேன ஒர்ப்பைணசதியைன
குணமுகலிகெநேனி கோட்டிசேயு
வாதயெனுமுபாலு ரோதனவச்சுனு
விஸ்வதாபிராம வினரவேமா.

(இ-ள்.) தேகங்கருப்பாகிலும் பொருமையுள்ள மனையாளாகிலும் நற்குணங்களுண்டா யிருக்குமாகில் கோடிபொன்பொருவாள் அதுபோல சூடுபோட்ட எருமைப்பாலைக் கேவலமாகச் சொல்லப் போமா சர்வவியாபியாகிய ஓ ராமா கேளும் வேமா. எ-று. ()

கடுபுநிண்டதவுடு கம்பலோபெட்டினு
சன்னிமுட்டனீயது கொன்னிபர்ரொ
வர்ரகாந்தலெல்ல வல்துராவூரிகெ
விஸ்வதாபிராம வினரவேமா.

(இ-ள்.) சிலது எருமைமாடுகள் வயிறு நிறையும்படித் தவிடு கூடையில் வைத்தபோதிலும் முலையைத் தொடவொட்ட மாட்டாது அதுபோலச் சிலது தீசிகள் பணங்கொடுத்த போதிலும் பிரியம் வைக்கமாட்டார்கள் சர்வ வியாபியாகிய ஓ ராமா கேளும் வேமா. எ-று. (கருஉ)

துன்னபோதுமட்க த்விரிதமுகாலேது
யெத்துமடககண்டெ யெச்சுகாது
முத்தராலிமகடு முஸலினிமெச்சுனு
விஸ்வதாபிராம வினரவேமா.

(இ-ள்.) ஏருதுமாடு ஏரிற்கட்டி விழுவதைப்பார்க்கிலும் எருமைக்கடாவைக் கட்டி விழுவது மேலாகமாட்டாது அதுபோல வயது மங்கையின் கணவன் கிழவியைப்பார்த்து மெச்சமாட்டான் சர்வவியாபியாகிய ஓ ராமா கேளும் வேமா. எ-று. (கருங)

குர்ரமுன்குதகின குருதைனரௌதுன்ன
குர்ரமுலிலநடெச்சு குணமுகானு
குர்ரமுதனவண்டி குணமேலநெலியரோ
விஸ்வதாபிராம வினரவேமா.

(இ-ள்.) குதிரைக்குத்தக்க வல்லவனுகிய சாரதியிருக்க அக்குதிரையானது குணமாக வுலகில் நடக்கும் அப்படி குதிரையைச் செலுத்தும் சாரதியைப்போல தனக்குள்ளிருக்கும் ஐம்புலன்களை யடக்கும் குணத்தையேன் அறியமாட்டார்களோ சர்வவியாபியாகிய ஓ ராமா கேளும் வேமா. எ-று. (கருச)

காடிதேமெருங்கு கந்தம்புவாசன
குக்கயேமெருங்கு கொப்பகொத்தி
அல்புடேமெருங்கு ஹருனிகொல்செட்டிரக்தி
விஸ்வதாபிராம வினரவேமா.

(இ-ள்.) சந்தணத்தின் சுவாசனையைக் கழுதையென்ன அறியும் சிறிதென்றும் பெரிதென்றும் நாயறியுமா அதுபோல அற்பன் அரனைச்சேவிக்கும் விதம் அறியமாட்டான் சர்வ வியாபியாகிய ஓ ராமா கேளும் வேமா. எ-று. (ககரு)

காடிதெதனுவந்து கந்தம்பூசின
யேமியெருகஜால கெகசிதன்னு
யீடுகானிவானி யிஷ்டமீலாகுரா
விஸ்வதாபிராம வினரவேமா.

(இ-ள்.) கழுதையின் தேகத்தில் சந்தணத்தைப் பூசினுல் அதின் குணத்தையறியாமல் எட்டியுதைக்கும் அதுபோல அற்பனுக் கெத்தனை விதத்தில் புத்தியுறைக்கினும் அவன் சுபாவகுணத்தை விடான். எ-று. (கருசு)

கொர்றெகும்புல தோடேஞுகொதுவதீர
சொச்சிபட்டெனு கொர்றொனுசொர்வகானு
குக்ககனுகொனி கொல்லனிகூசிலேப
யதருபெதருன தேலெனுயதடுவேமா.

(இ-ள்.) ஆட்டுமெந்தையில் கோனும் பசிதீரப்புகுந்து வெகு சுருசுருப்பாயொரு ஆட்டைப் பிடித்துக்கொள்ள அதைக்கண்டு நாயானது குலைத்து இடையனையெழுப்ப அவனரண்டு பிரண்டு எழுந்து அதட்டி உதட்டியாகக் கோனையையோட்டினுன் வேமா.()

கொர்றெலொக்கமந்த கூடினசோட்டனு
தல்லிநெருகி சேருதானிபில்ல
பரமயோகிநெரிங்கி பக்துண்டுசேருரா
விஸ்வதாபிராம வினரவேமா.

(இ-ள்.) ஆடுகள் ஒரு மந்தையாகக் கூடின யிடத்தில் ஆட்டுக் குட்டியானது அக்கூட்டத்தில் தன்தாயைத்தேடி அதனிடஞ்சேரு மாப்போல பக்தனுனவன் பரமயோகியைத் தெரிந்து சேருவான் சர்வவியாபியாகிய ஓ ராமா கேளும் வேமா. எ-று. (௧௫௮)

பெட்டபுஞ்சுகூடி பெனகினயப்புடு
குட்டிபெட்டிதானி குலமுஜேசு
புஞ்சுலேனிபெட்ட புடமிகுப்பலனுண்டி
தோலுகுட்டுபெட்டு தொடரிவேமா.

(இ-ள்.) பெட்டைக்கோழி சாவலுடன் பிணைந்துக் கூடிக் கலந்தபோது கருதரித்து அப்பெட்டைக்கோழி முட்டையிட்டுத் தன்குலத்தை விருத்திசெய்யும் சாவலில்லாத பெட்டைக் குப்பை யிற்பிணைந்து தோலுமுட்டைகளைத் துடர்ந்துவிடும் வேமா. எ-று.

மேகலொக நூறுசனிநனு
ப்ராகட்டமுகநொக்ககோ திபர்னம்பெக்குன்
ஆகபுலுநூறு சனிநனு
கோகோயனியொக்கநக்க கூசெர்வேமா.

(இ-ள்.) ஆடுகளொருநூறு சென்றக்கால் அதுகளைக்கண்டு பயந்து ஒரு குரங்கு மரத்திலேறிக்கொள்ளும் அக்குரங்குகள் நூறு சென்றிடக்கண்டு ஒரு நரியானது கோவென் றலரிகூவியதுஓராமா கேளும் வேமா. எ-று. (௧௬௦)

குக்கநந்தளமுலோ கூர்ச்சுண்டபெட்டின
ஒக்கமனசுதோட றுண்டபோது
ஆத்மநில்பலேனி யக்ஞானிசந்தம்பு
விஸ்வதாபிராம வினரவேமா.

(இ-ள்.) உத்தமஸ்தானத்தில் பட்டுப்பட்டைகளை விரித்து அதின்பேரில் நாயை ஒக்காத்தி வைக்கினும் அந்தநாயானது ஒரு மனதுடன் யிருக்கமாட்டாது அதற்கு திஷ்டாந்த மென்னவெனில் மனதை நிருத்தமாட்டாத அக்ஞானியை யொத்ததாம் சர்வவியாபியாகிய ஓ ராமா கேளும் வேமா. எ-று. (கசுக)

குக்கயேமெருகுனு குருலிங்கதேவரு
நக்கீபோதெருகுனே ஒக்கப்ரொத்து
மெக்கலுண்டெருகுன மோக்ஷமார்க்கம்புனு
விஸ்வதாபிராம வினரவேமா.

(இ-ள்.) ப்ரமாச்சாரியன் மகிமையை நாயறியுமோ விரதத்தின் பெருமையை ஆண் நரி யறியுமோ சர்வமூடனறிவனோ மோக்ஷமார்க்கத்தின் அருமை சர்வ வியாபியாகிய ஓ ராமா கேளும் வேமா. எ-று. (கசுஉ)

குண்டிகுக்ககேல குந்தேட்டிவைரம்பு
பிரிகிபண்டுகேல பிருதுகொடவ
முகிஸிலஞ்சகேல முசிமுசிநகவுனு
விஸ்வதாபிராம வினரவேமா.

(இ-ள்.) முசலினிடம் நொண்டி நாயிக்கேன் வைரம் பயமுள்ள சேவகனுக்கேன் கையில்விருது கிழவைப்பாட்டிக்கேன் குஞ்சிறிப்புகள் சர்வ வியாபியாகிய ஓ ராமாகேளும் வேமா. எ-று.

குக்கதோகதெச்சி கோவிலோபெட்டிதே
கோவிசாயநுண்டு கொந்தரகு
கோவிதீசிஜூட கொடவலிவலெநுண்டு
விஸ்வதாபிராம வினரவேமா.

(இ-ள்) நாயின் வாலை யாதாமொரு குழைக்குள் வைத்தால் அந்த வால் சிறிதுநேரங் குழைக்குள் நீண்டிருக்கும் அக்குழைக்குள்ளிருந்து வெளிப்படுத்திப் பார்க்க அந்தவால் முன்னமிருந்தபடி அறிவாளைப்போலிருக்கும் சர்வ வியாபியாகிய ஓராமா கேளும் வேமா. எ-று. (கசுச)

குக்கமனுஜுகன்ன குணமெந்நகலதனி
மனுஜகுணமுலேக மரியுநுண்ண
குக்ககண்டெநருடு குணஹியுன்ன
விஸ்வதாபிராம வினரமேவா.

(இ-ள்.) மனிதர்களுக்காகிலும் நாய்க்கு குணமெவ்வளவுண்டென்றும் மனிதர் குணமில்லாமலிருக்கும் அந்த நாயிக்காகிலும் மெந்த குணயீனனுகியிருப்பன் சர்வ வியாபியாகிய ஓ ராமா கேளும் வேமா. எ-று. (கசரு)

தானுவுண்டுபூமி தனரங்கயுண்டெடு
ஜங்கமையனுகனி ஸரக்கரச்சு
குக்கபுத்திவானி குணமேலமானுரா
விஸ்வதாபிராம வினரவேமா.

(இ-ள்.) தானிருக்கும் பூமியில் வசிக்கும் குருநாதனைக்கண்டு விரைவாகக் கடிக்கும் நாயின் குணமுடையவன் புத்தியேன் மாருமோ ஒருக்கானு மாராது சர்வ வியாபியாகிய ஓ ராமா கேளும் வேமா. எ-று. (கசசு)

குக்கதின்னவாடு குருலிங்கஜங்கம்பு
பந்திதின்னவாடு பரமயோகி
யேனுகுதின்னவாடு யெந்தசுக்ஞானிரா
விஸ்வதாபிராம வினரவேமா.

(இ-ள்.) அன்னியர்மீது கோபித்துச் சள்ளென்று கடுமையாகப்பேசும் நாயைத் தின்றவன் பரமகுருநாதனுகும் இவடத்திய வார்த்தையை அவடத்திலும் அவடத்திய வார்த்தையை இவடத்திலும் சொல்லுவதுடன் நல்லோரை நிந்திப்பதென்னும் மொருவலாகிய பன்றியைத்தின்றவன் பரமயோகியாவான் அன்றியும் மதத்தினுல் நானென்னும் ஆங்காரத்தைத் தின்றவன் எவ்வளவோ நல்ல க்ஞானியாவான் சர்வவியாபியாகிய ஓராமா கேளும்வேமா. எ-று.

குக்கயேமெருங்கு குருலிங்கஜங்கம்பு
பிக்ஷவட்டிவட்டி பீருகரக
சந்தவாடசொந்து சன்யாசிநெருகுனு
விஸ்வதாபிராம வினரவேமா.

(இ-ள்.) குருநாதன் மகிமையை அற்ப நாயானதறியுமோ கண்டசலதையைப் பிடித்துப் பிடுங்குமல்லாமல் விடமாட்டாது போல சந்தைவாடையில் வசிக்கும் வேசியானவள் சன்னியாசி யென்றறியாமல் மேல்விழுந்து புணர்ச்சிசெய்யாமல் விடமாட்டாள் சர்வ வியாபியாகிய ஓ ராமா கேளும் வேமா. எ-று. (கசுஅ)

குக்ககரிச்செநேனி குய்யங்கபிகபட்டி
பக்கவிரக்நன்னி பண்டபெட்டி
நிம்மமேகுதெச்சி நெத்தினகொட்டிதே
குக்கவிஷமுதிருனு குதுருவேமா.

(இ-ள்.) நாய்கடித்ததேயாகில் கூப்பிடாமல் இருகப்பிடித்துப் பக்கமுடைய வுதைத்துப் படுக்கவைந்து எலுமிச்சன் மேக்கு ஒரு வித்துச் சிரசில் அடித்தால் நாயின் விஷமிரங்கிச் சுகமாம் வேமா.

நக்கவினயமுலுனு நாயகராமுலுஜேசி
பெனுகுவலதொ கூடபெட்டுதனமு
குக்கபோதுவாந்த கூடுச்சல்லினரீதி
விஸ்வதாபிராம வினரவேமா.

(இ-ள்.) நரிவினயங்களும் நயவார்த்தைகளும் பேசி திரவி யஞ் சேகரித்துப் பெருத்தகுப்பலுடன்கூட வைத்த த்னமானது எத்தன்மையா மென்றால் நாயின்வாயில் சாதத்தை யிறைத்தாற் போலாகும் சர்வ வியாபியாகிய ஓ ராமா கேளும் வேமா. எ-று.

நக்கநோட்டிகண்ட நதிலோனிமீனுகை
திக்கபட்டிவிடிச்சி மொக்கசெட்னு
மிக்குவைனகத்த மாம்சமெத்துகபோய
விஸ்வதாபிராம வினரவேமா.

(இ-ள்.) நரியானது நதிக்குள்ளிருக்கும் பெருத்த மீனைக் கண்டு ஆசித்துத் தன்வாயிலிருந்த இறச்சியைவிட்டு மீனைப் பிடிக்க முயன்றபோது ஒருபருந்தானது வந்து அவ்விறச்சியை அடித்துக்கொண்டு போயிற்று அதைக்கண்டு நரியானது அவமானப் பட்டது சர்வவியாபியாகிய ஓ ராமா கேளும் வேமா. எ-று. ()

பந்திபில்லலேயு பதியிண்டனிண்ட
குஞ்சரம்புயீனு கொநமநொக்கட்டி
உத்தமபுருஷண்டு வொக்கடேச்சாலுரா
விஸ்வதாபிராம வினரவேமா.

(இ-ள்.) பன்றியானது பத்து அல்லது பதினைந்து குட்டிகளைப்போடும் யானை ஒரேகன்றைப்போடும் அப்பன்றியைப்போல பலதுஷ்டபிள்ளைகள் பிறக்கினும் யானைக்கன்றைப்போன்ற உத்தமபுருஷன் ஒருவன் பிறந்திடிற்போதும் சர்வவியாபியாகிய ஓ ராமா கேளும் வேமா. எ-று. (களஉ)

ஊரபந்தியெருங்க துத்தரதக்ஷிணம்
செட்டநாகமெல்லச் செண்டுகாக
பாதிவ்ரத்யமகிம பலுகாகியெருகுனே
விஸ்வதாபிராம வினரவேமா.

(இ-ள்.) ஊர்பன்றியானது துர்க்கந்தமான நரகலைப்புசிக்குமல்லாமல் வடக்கு தெற்கு அறியமாட்டாதுபோலப் பதிவிரதையின் மகிமையைச் சபலசித்தன் அறியமாட்டான் சர்வவியாபியாபியாகிய ஓ ராமா கேளும் வேமா. எ-று. (களக)

கோதிகொனரதெச்சி கொத்தமுபட்டமுகட்டி
கொண்டமுச்சுவெல்ல கொலச்சிநட்ளு
நீதிஹீனுனிவத்த நிர்ப்பாக்யுலுன்னட்டுளு
விஸ்வதாபிராம வினரவேமா.

(இ-ள்.) குரங்கைப் பிரியத்துடனழைத்துவந்து புதுமையாக அதற்குப் பட்டங்கட்டி கருங்குரங்குகளெல்லாம் அக்குரங்குக்குப் பணிசெய்வது எப்படிப்போலென்றால் நீதியற்றவனிடத்தில் தரித்திரர்கள் சேவை செய்வதுபோலாம் சர்வவியாபியாகிய ஓ ராமா கேளும் வேமா. எ-று. (களச)

லட்சிமியேலிநட்டி லங்காதிபதிபுரி
பில்லகோதிபௌஜு கொள்ளபெட்டெ
சேட்டுகாலமுனகு செருபகல்புடெசாலு
விஸ்வதாபிராம வினரவேமா.

(இ-ள்.) இலக்குமிவாசம் பொருந்திய லங்கையை ராவணன் அனேக வருடகாலம் அந்த லங்கைக்கு அதிபதியாய் மூவுலகமுந் தொழ ஆண்டுக்கொண்டிருந்து அந்த லக்குமியையே பெண்டாளவெண்ணின பாமரனுடைய லங்காபுரியைக் குரங்குக் கூட்டங்கள் கொள்ளையிட்டதுகள் ஒரு மனிதனுக்குக் கெட்டகாலம் வந்தனுகுமாகில் அவனைக்கெடுக்க அற்ப மனிதனே போதும் சர்வவியாபியாகிய ஓ ராமாகேளும் வேமா. எ-று. (களரு)

லட்சிமிபோவுநாடு லங்கேசுராஜ்யம்பு
நந்தட்டகபிசேன ஞக்ரமிஞ்செ
சேடுகாலமைன் செருப்நல்புடெசாலு
விஸ்வதாபிராம! வினரவேமா.

(இ-ள்.) இலக்குமி நீங்கிப்போகும் நாளில் இலங்கைக்கு ராஜனாகிய ராவணனுடைய நகரத்தை வானரசேனைகள்கவிந்துக்கொண்டது கெட்டகாலம் வந்தணுகுங் காலத்தில் தன்னைக்கெடுக்க அற்பமனிதனே போதும் சர்வ வியாபியாகிய ஓ ராம! கேளும் வேமா. எ-று. (கஎசு)

பில்லியெலுகபட்டி ப்ரியமுதோடுதமிங்க
அதியகோடிதினனு பலுகநேல
மமதவிடுவகுன்ன மானுஞ்மோகம்பு
விஸ்வதாபிராம வினரவேமா.

(இ-ள்.) பூனையானது பிரியத்துடன் யெலியைப் பிடித்து விழுங்கும் சாமர்த்தியம் தனக்கிருந்தும் அப்பூனை கோழியைத் தின்ன கோபிப்பதேன் தானென்னும் ஆங்காரத்தைவிடாமலிருக்க மோகந் தீருமா சர்வ வியாபியாகிய ஓ ராமா கேளும் வேமா. எ-று.

எலிகதோலுதெச்சி யேடாதிவுதிகினு
நலுபுநலுபேகானி தெலுபுகாது
கொய்யபொம்மனுதெச்சி கொட்டிஞபலுகது
விஸ்வதாபிராம வினரவேமா.

(இ-ள்.) எலியின்தோலைக் கொண்டுவந்து ஒருவருடகாலம் துவைத்தபோதிலும் அத்தோல் கருப்புகருப்பேயல்லாமல் வெண்மையாகாது அதேதப்படியெனில் மரபொம்மையைக் கொண்டுவந்து பலவிதமாக அடித்தபோதிலும் பேசுமா பேசாதுபோல கருப்பு தோல் வெள்ளைத்தோலாகமாட்டாது சர்வ வியாபியாகிய ஓ ராமா கேளும் வேமா. எ-று. (கஎஅ)

புலியுயெட்டிதன்ன பூலோகம்ருகராஜு
கலியுயெட்டி தன்னகானராது
புலியுகலியுகன்ன புவிணிநாகலியெச்சு
விஸ்வதாபிராம வினரவேமா.

(இ-ள்.) புலியானது யெப்படிப்பட்டதென்றால் இந்த பூலோகத்திற்கு மிருகவரசன் கலியானது யெப்படிப்பட்டதென்றால் அதைக்காண்ப தரிதாகும் அப்படிப்பட்ட புலியையுங் கலியைக் காட்டிலும் பசி பெரிதாகும் சர்வ வியாபியாகிய ஓ ராமா கேளும் வேமா. எ-று. (களகூ)

பல்லூகமுல லெப்ராக்னுலு
யில்லோகமுலந்துகுருனி யெருகருதமலோ
மூல்லோகமெரிகி நட்டுவலெ
கொல்லுனதமுபொடுசுண்ட்ரு சொனகொனிவேமா.

(இ-ள்.) கரடியைப்போல தெளிவுள்ளவர்கள் இவ்வுலகத்தினில் குருநாதனை யறியமாட்டார்கள் தங்களுக்குள் மூன்றுலோகங்களையும் அறிந்தவர்கள்போலத் தங்களைத் தாங்களே அடிக்கடி புகழ்ந்துக்கொண் டிருப்பார்கள் வேமா. எ-று.

கருடஜேல்ஜேசி கனதநோபுஜ்ஜியிஞ்ச
வலெநடஞ்சுநருலு வாஞ்சதீர
பலுகுச்சுந்துருகானி பாவம்புகானரு
விஸ்வதாபிராம வினரவேமா.

(இ-ள்.) கெருடதெரிசனஞ் செய்துப் பின்பு புசிக்கவேணுமென்று வாஞ்சைதீர நரர்கள் வசனித்துக்கொண் டிருப்பார்களன்றி அதன்மர்மத்தை யறியார்கள் சர்வ வியாபியாகிய ஓ ராமா கேளும் வேமா, எ-று. (கஅக)

பல்லிபலுகுலுவினி ப்ரஜதமபனுலெல்ல
சபலமனுச்சுதாமு சம்மதிஞ்சி
கானிபனுலகுதம கர்மம்ட்டந்துகு
விஸ்வதாபிராம வினரவேமா.

(இ-ள்.) பல்லி வசனிப்பதைக்கேட்டு மனிதர்கள் தங்களுடைய வேலைகளெல்லாம் அனுகூலமாகுமென்று மனதில் திருப்தியடைந்து யிருப்பார்கள் அவ்வேலை யனுகூலப் படாமற் போகுமேயாகில் நமதுகர்மத்தின் பயனிதாமென்பார்கள் சர்வவியாபியாகிய ஓ ராமா கேளும் வேமா. எ-று. (கஅஉ)

பாமுகண்டெஜீவி பாபிஷ்டியுனுலேது
அட்டிபாமுசெப்பி நட்டெவினுனு
கலுனிகுணமுமான்பு கனுலெவ்வருதுலேரு
விஸ்வதாபிராம வினரவேமா.

(இ-ள்.) பாம்புக்காகிலும் பாபஞ்செய்த ஜீவன்க ளேதுமில்லை அப்படிப்பட்ட துஷ்டஜெந்துவாகிய பாம்பு மந்திரபலத்திற்கு கட்டுபட்டு சொல்வதைப்போலக்கேட்டு நடைக்குட்பட்டிருக்கும் பாபசொரூபனுகிய துஷ்டனுடைய குணங்களைப்போக்கும்கனவான்கள் யாருமில்லை சர்வவியாபியாகிய ஓ ராமா கேளும் வேமா. ()

தேலுவண்டிதானி தெரியகொண்டவிஷம்பு
பணிகினுண்டுவிஷமு பண்ணயந்து
தெலிவிலேனிவாரி தேஹமெல்லவிஷம்பு
விஸ்வதாபிராம வினரவேமா.

(இ-ள்.) தேளுக்குக் கொடுக்கில் விஷமிருக்கும் பாம்பிற்கு விஷம் கோரைப்பற்களில் விஷமிருக்கும் தெளிவில்லாத பாமரர்களுக்கு தேகமெல்லாம் விஷமேயாம் சர்வ வியாபியாகிய ஓ ராமா கேளும் வேமா. எ-று. (கஅச)

சிமகுட்டெநேனி சிவுகனிபிஞ்சுனு
சிமயெந்ததானி ஜீவமெந்த
சிவவண்டிகுருனி ஸ்ருஷ்டிலோநெருகரா
விஸ்வதாபிராம வினரவேமா.

(இ-ள்.) எறும்பு கடிக்குமாகில் சுருக்கென்றுநோகும் அந்த எறும்பு எவ்வளவு அதன்ஜீவனெவ்வளவு அவ்வெறும்பையொத்த சத்குருநாதனை சிருஷ்டிக்குள்ளாகத் தெரிந்துகொள் சர்வவியாபியாகி ஓ ராமா கேளும் வேமா. எ-று. (கஅரு)

மசகமுஜம் மனியூச்சு
பஸகலதேஹமுனவ்ராலி பலுதிட்சணமுகா
கொசகலமுக்குதொ பொடுச்சுச்சு
வெஸ்க்ரேரலுனு நெத்துரிலனுவினரவேமா.

(இ-ள்.) கொசுவானது கொய்யென்று கூவிக்கொண்டு வந்து பசையுடைய தேகத்தின்மீ துட்கார்ந்து வெகு சுருசுருப்பாகக் கூர்மையுடைய மூக்கினுற்குத்தி விரைவாக ரத்தத்தைப் புசிக்கும் இவ்வுலகத்தில் வேமா. எ-று. (கஅசு)

ஈகபெட்டிதன்ன யீஸ்வருவண்டிதி
தெலிசிகூடகன்ன தேட்டபாடது
அதியுகுருவுலேக யப்பனுதெலியங்க
விஸ்வதாபிராம வினரவேமா.

(இ-ள்.) ஈயானது யெப்படிபட்டதென்றால் ஈஸ்வரனையொற்றது அதைத்தெரிந்து பார்க்காமலிருந்தால் தெளிவுபடாது அப்படி யதைந்தெரிந்து தெளிவடைவதற்குசத்குருநாதனில்லாமல்மர்மந் தெரிவதறிதாகும் சர்வவியாபியாகிய ஓ ராமா கேளும் வேமா.

மொகவாடை யாடதியை
வகதெகிபோரானிவானி வருசலவாடை
யுகயுகமுல நட்டியிஞ்சுனு
சுகுணயிடுவண்டிவஸ்து சூடரவேமா.

(இ-ள்.) புருஷனாகிப் பெண்ணாகி பலவகையுருந்துபோகாதவனை அண்ணனென்றும்தம்பியென்றும்தமக்கையென்றும் தங்கையென்றும் மனைவியென்றும் மகனென்றும் யின்னும் பலவித வரிசையுடையவனாகியுகங்கள்தோரும் நடனம்செய்யும் இப்படிப்பட்ட வஸ்துவைப்பாரும் நற்குணமுடைய வேமா. எ-று. (கஅஅ)

புண்யமந்தகூடி புருஷுடைஜன்மிஞ்செ
பாபமுனனுபுட்டெ பட்டிபுவிலொ
கஷ்டமாசதியனி கனிரோயலேரயா
விஸ்வதாபிராம வினரவேமா.

(இ-ள்.) புண்ணியமெல்லாஞ் சேர்ந்து புருடனாகி ஜென்மமெடுத்தவன் பாபமெல்லாங்கூடிப் பெண்ணாகிப் பூதலத்தில் பிறந்தவளைச்சேர்ந்து காமாதிகளை யனுபவிக்கக் கோரிக்கைகொள்வரேயன்றி அக்கொடிய பாபசொரூபமாகிய பெண்ணைக் கூடினால் நமக்கு கஷ்டம் சம்பிராப்தமா மென்றுணர்ந்தும் வெறுப்படைவதில்லை சர்வவியாபியாகிய ஓ ராமா கேளும் வேமா. எ-று. (கஅகூ)

ஆடதனகரோத்தயந்து ஜூச்சினரோத்த
தலசிசூடகதமகு தாமேமெச்சி
யெந்தவாடைன்னு யெஞ்சருதமலோன
விஸ்வதாபிராம வினரவேமா.

(இ-ள்.) பெண்ணென்றால் ரோத்தை அப்பெண்ணின் அல்குலைப்பார்க்க ரோத்தை அதைநினைத்துப் பாராமல் அப்பெண்ணைத் தமக்குத் தாங்களேகொண்டாடி யெப்படிப்பட்டவனாகிலும் தனக்குள்ளாக யெண்ணிப்பாரான் சர்வ வியாபியாகிய ஓ ராமா கேளும் வேமா. எ-று. (ககூ௦)

ஜனனமரணவேன ஸ்வதந்த்ரஹீனுண்டு
மொதட்டகர்த்தகாடு துதனுகாடு
நடமகர்த்தனுட்ட நகுபாட்டுகாதகோ
விஸ்வதாபிராம வினரவேமா.

(இ-ள்.) ஜெனனமரணமென்னும் இரண்டு வேளையிலும் சுதந்திரமில்லாத ஒரு மனிதன் முதலிலும் அந்தியத்திலுங் கர்த்தா வல்ல நடுமத்தியில், கர்த்தன் னென்பது நகைப்புக் கிடமாமல்லவோ சர்வவியாபியாகிய ஓ ராமா கேளும் வேமா. எ-று. (ககக)

சதியந்தே பதிபுட்டெனு
சதியுனுபதியந்தெபுட்டெ பரமார்த்தமுகா
சதிபதுலன காநெவ்வரு
மதிலோதலபோசிசூட மஹிலோவேமா.

(இ-ள்.) உலகத்தினில் மனைவியினிடத்திலேயே மணாளன் பிறந்தான் அம்மணாளனிடத்திலேயே மனைவியும் பிறந்தாள் பராபர வஸ்துவின் கிருபையால் மனதிற்குள் யோசித்துப் பார்க்க மனைவி மணாளனென்றால் யாவர் அந்த ரகசியத்தைத் தெரிந்துக் கொள் வேமா. எ-று. (ககஉ)

சதியொனர்ச்சு துடுகு பதிகவஸ்யமுவச்சு
பதியொனர்ச்சுமஞ்சி சதிகிசகமு
பதியொனர்ச்சு துடுகு சதிகேலராதுரா
விஸ்வதாபிராம வினரவேமா.

(இ-ள்.) மனைவி செய்யும்பாவம் அவசியம் மணாளனைச்சேரும் மணாளன்செய்த புண்ணியத்தில் பாதிமனையாளைச் சேரும் மணாளன்செய்த பாவம் மனையாளுக்கேன் சேரமாட்டாது சர்வ வியாபியாகிய ஓ ராமா கேளும் வேமா. எ-று. (ககங)

பதினிதிட்டராது பதிவேலகைனனு
பெட்டிசெப்பராது பேதகைன
பதினிதிட்டராது சதிமானவதியைன
விஸ்வதாபிராம வினரவேமா.

(இ-ள்.) பதினாயிரம்வராகன் வருவதாயிருக்கினும் மணாளனை வையப்படாது ஏழைக்காகிலும்யிட்டு சொல்லக்கூடாது மனையாள் மானியாகில் மணாளனைத் திட்டக்கூடாது சர்வ வியாபியாகிய ஓ ராமா கேளும் வேமா. எ-று. (ககச)

பதிசுது லித்தருகூடா
சதிகிருகடபவ்வளிம்ப சந்ததந்ரு ஷ்டின்
பதிஜுச்சு மீதிமாம்சமு
சுதுடக்கலிபாலுப்ரேம ஜுச்சுரவேமா.

(இ-ள்.) கணவனும் புத்திரனு மிருவருங்கூடி மனைவிக்கிரு பக்கத்திலும் படுத்துக்கொள்ள அதில் மணாளன் மனைவியின் மார்பாகிய மாம்சத்தின்மீதிச்சைகொண்டுப் பார்ப்பான் மகனதற்குள்ளிருக்கும் பாலைக்குடிக்கப் பிரியமாகப் பார்ப்பான் வேமா, எ-று.

பதிசுது லித்தருகூடா
சதிகிருகடபவ்வளிஞ்சி சன்னுலுமுட்டன்
சுதடண்டின பாலுப்புனு
பதிமுட்டினஅல்லதாவு பதனகுவேமா.

(இ-ள்.) மணாளனும் மகனுங்கூடி மனையாளுக் கிருபக்கமும் படுத்துக்கொண்டு கொங்கையைத்தொட்ட அவ்விருவரில் புத்திரன் பிடித்தால் பால்சுரக்கும் மணாளன்பிடித்தால் அல்குலிடத்தில் பிரவேசிக்கலாகும் வேமா. எ-று. (௧௧௬)

பதியொப்பின சதியொப்புனு
சதிபதுலொகடைன பரமபாவனமந்துன்
சதிபதின்யா யமேமோக்ஷம்
பதுலிதபரமாத்மசைக்ய மருராவேமா.

(இ-ள்.) மணாளன் ஒப்பினால் மனையாளொப்புவள் அம்மணாளனும் மனையாளும் ஒன்றாகில் பரமபாவனமாகும் மனையாள் மணாளனுடைய நியாயமே மோக்ஷமார்க்கம் புகழவுங் காணவுங்கூடாத பரமாத்மாவுக்கு ஐக்கியமாகும் வேமா. எ-று. (௧௧௭)

அனுகூல்யமைன யங்கனகலிகின
சதிகிபதிகி பரமசௌக்யமரு
ப்ராதிகூல்யமைன் பரிஹரிஞ்சுசுகம்பு
விஸ்வதாபிராம வினரவேமா.

(இ-ள்.) புருடனுக்கு அனுகூலமாகிய மனையாள் கிடைக்கில் மணாளனுக்கும் மனையாளுக்கும் பரமசவுக்கியமுண்டாகும் விரோதியாகிய மனையாள் புருடனுக்குக் கிடைக்கில் புருடனுக்குங் கஷ்டமே மனையாளுக்குங் கஷ்டமே யுண்டாகும் சர்வ வியாபியாகிய ஸ்ரீ ராமா கேளும் வேமா, எ-று. (௧௧௮)

மொலகசன்னுலகனமோஹம்புபுட்டிஞ்சு
கும்பசன்னுலகன கோர்கெதிரு
தடகசன்னுலகன தய்யானுவெல்லவு
விஸ்வதாபிராம வினரவேமா.

(இ-ள்.) முலையாகிய கொங்கையைப்பார்க்க மோகம் பிறக்கச்செய்ய வள்ளமுலையைப்பார்க்கக் கோரிக்கைத்தீரும் தொங்கின ஸ்தனத்தைப் பார்க்க பேய்கள்கூட சகிக்கமாட்டாது சர்வ வியாபியாகிய ஓ ராமா கேளும் வேமா. எ-று. (௧௯௯)

புஷ்வுசனுக்விகின பூமெல்லவெலசேயு
கொதமசன்னனுலகன கோட்டிசேயு
தடகசன்னுலுகன தய்யானுநொல்லது
விஸ்வதாபிராம வினரவேமா.

(இ-ள்.) புஷ்பக் கொங்கையுண்டாகில் அக்கொங்கைக்கு விலை எல்லா பூமியும்பொருளும் மைத்த கொங்கைகளின்விலை கோடிபொருளும் தொங்கின ஸ்தனத்திற்கு விலையொன்றுமில்லை சர்வவியாபியாகிய ஓ ராமா கேளும் வேமா. எ-று. (௨௦௦)

சன்னுகுடிச்சிபெரிகி சன்னுகோயாசிஞ்சி
சன்னுவல்லமுக்தி சப்பனுயெ
சன்னுவிடிச்சுனதடு சர்வதாயோகிரா
விஸ்வதாபிராம வினரவேமா.

(இ-ள்.) முலையுண்டுவளர்ந்து அந்த முலைக்கே ஆசித்துத் திரிந்தபடியினலே முக்திநலமானது கிட்டாமற்போயிற்று அந்தமுலையின்மீது ஆசையற்றவன் சதாகாலமும் பரமயோகியாவான் சர்வ வியாபியாகிய ஓ ராமா கேளும் வேமா. எ-று. (௨௦௧)

இந்திவிந்தகன்னு லிங்கிந்சிசன்னுலு
இந்திகல்புவாடு யெரிகியெரிகி
சோகுண்டெடுவாடு க்ஷிதிலோனயோகிரா
விஸ்வதாபிராம வினரவேமா.

(இ-ள்.) மங்கையின் கண்களும் கைக்கடங்காத பெருத்த கொங்கைகளையுங்கண்டு பிரமித்து அம்மங்கையின் மாய்கைக்குள்ளாகிக் கூடிக்கலந்து நாளைப்போக்கினவன் பிரமராகி மருபிறப்புக்குட்படுவீரன் அப்படி யம்மாதர்கள் செய்யு மிந்திரஜால தந்திரங்களையும் அவர்களைக் கூடிக்குலாவுவதால் நேரிடும் துக்கங்களையும் பகுத்தறிந்து அவர்களைச் சேராதிருப்பவன் இவ் வுலகத்தினில் யோகியாகும் சர்வ வியாபியாகிய ஓ ராமா கேளும் வேமா. எ-று.

சன்னுல வ்ண்டிதிசம்பத
கொன்னுள்ளதுகோமுஜ-ஒபு கொப்பனஜாருன்
வென்னெனு சீகட்டிவண்டிதி
அன்னு சிவலிங்கமான யவனிவேமா.

(இ-ள்.) கொங்கைகளை யொற்றது சப்பத்து சிறிதுநாள்களுக்கு குத்துமுலையாகக் காட்டிப் பின்புடனேதொங்கிடும் அதைப் பற்றி தீர்க்கமாக யோசிக்குமிடத்தில் சிலநாள் நிலவும் சிலநாள் யிருட்டையும் யொற்றிருக்கும் இதுபொய்யல்ல சிவலிங்கத்தின் மீதாணையாகச் சொல்கின்கிறேன் அண்ணு யிவ்வுலகத்தின் வேமா.

இந்திகன்னுசன்னு லிந்தேசியனுஜ-ஒச்சி
மோஹபடுனுப்த்தி மோசபோயி
கரிசலேனிவான கானலேதயரா
விஸ்வதாபிராம வினரவேமா.

(இ-ள்.) கண்சைகைகளாலும் இவ்வளவுஇவ்வளவு பருமனுன முலைகளையுமுடைய மங்கையைப் பார்த்து புத்திமோசத்தினலே மோகிப்பன் அதெப்படியெனில் கரிசையில்லாத மழை கண்களுக்குக் காணப்பட்டதாயிற்று சர்வ வியாபியாகிய ஓ ராமா கேளும் வேமா. எ-று. (உ0ச)

ஜிட்டுகொருதூட்ட சீமுகாருபுண்ட
கட்டிசிவுகுநிண்ட கானுபண்பட
பிட்டகுடேச்சுசண்ட பிகுவேலயுண்டுரா
விஸ்வதாபிராம வினரவேமா.

(இ-ள்.) துளையில் ரத்தமொழுகும் புண்ணில் சீழொழுகும் புல்லினுல் முருக்கின சவுக்கைப்போல பற்களால் பிள்ளையுண்ணும் கொங்கைக் குதளர்ச்சியுண்டாகுமே அன்றிப்பிருவுபோனிருக்கும் சர்வ வியாபியாகிய ஓ ராமா கேளும் வேமா. எ-று. (உ0ரு)

ஸ்ரீலசனுலுபூலசெண்ளு காபோல்துரு
பாலுமாலினட்டி பந்துவெல்ல
படதிசன்னுலெட்ளு பந்துலபோலுரா
விஸ்வதாபிராம வினரவேமா.

(இ-ள்.) ஸ்த்ரீகளுடைய முலைகள் பூச்செண்டுகளா மென்று சொல்லுவார்கள் அப்படி சொல்லுமவர்கள் யாரெனில் அம்முலைகளுக்கு ஆசித்துப் பன்றியைப் போன்றவர்களேயாம் மங்கையின் முலைகளெப்படி பூச்செண்டுகளைப்போலாகுமா சர்வ வியாபியாகிய ஓ ராமா கேளும் வேமா. எ-று.

குலுகுசனுலஜூபி கொப்புனகரிகிஞ்சி
சேநிகாசுலெல்ல செல்லதீசி
அலுகஜேசிகொந்து ரலவாரகாந்தலு
விஸ்வதாபிராம வினரவேமா.

(இ-ள்.) தாசிகள் குலுங்கும் ஸ்தன்னியங்களைக் காட்டிப் புருடர்கள் மன்தை யுருகச்செய்து மயக்கி அவர்கள் கையிலிருக்குங் காசுகளை யெல்லாம் அபகரித்துக் கோமணாண்டிகளாக்கி அவர்களையோட்டி வேறொருவனைப் பிடிக்கும்பொருட்டு கோபஞ் செய்துக் கொள்ளுவார்கள் சர்வ வியாபியாகிய ஓ ராமா கேளும் வேமா. எ-று. (௨0எ)

சன்னுலு பர்சதிகொப்பின
கன்னுலகுனுபாப த்ருஷ்டிகதியகமுனுபே
சன்னுலுமுனு தாகுடிச்சின
சன்னுலுகாஜூடவலயு சஹஜமுவேமா.

(இ-ள்.) பரஸ்த்ரீகளுக் கொப்பாகிய கண்களுக்கும் முலைகளுக்கும் மனிதன் ஆசித்து பாபத்ருஷ்டியானது அதுகளின்மீது கவியாமுன்னமே ஆதியில் தானுண்ட பாற்குடங்களாக பாவித்து சாதாரணமாகப் பார்க்கவேண்டும் அம்முலைகளை வேமா. எ-று. ()

யோனிலோனபுட்டி யோனிலோனபெரிகி
யோனிலோனி தெருவுகானலேக
யோனிஜூச்சிபரம யோகம்புமரசெரா
விஸ்வதாபிராம வினரவேமா.

(இ-ள்.) யோனிக்குள்ளே பிறந்து யோனிக்குள்ளே வளர்ந்து யோனிக்குள்ளே யிருக்கும் வெளியைக்காண மாட்டாமல் யோனியைப்பார்த்து பிரமித்து மனிதன் பரமயோகத்தை மறந்தான் சர்வ வியாபியாகிய ஓ ராமா கேளும் வேமா. எ-று. (௨0௯)

ஈதகிஞ்சவுண்டி யிசுமந்தயோனிகி
ஆசபட்டெடுவாறு அகிலஜனுலு
தீனிவிடசினயட்டி தீருலெவ்வருலேரு
விஸ்வதாபிராம வினரவேமா.

(இ-ள்.) ஈச்சங் கொட்டைபோன்ற இவ்வளவு யோனிக்கு ஆசைப்படுமவர்கள் அகிலஜனங்கள் இதனை வெறுத்துவிடத்த அப்படிப்பட்ட தீரர்கள் யாருமில்லை சர்வவியாபியாகிய ஓராமா கேளும் வேமா. எ-று. (உகO)

படதியோனிபடுபு பாட்டிஞ்சிசூசிதே
கோட்டிபூஜலெல்ல கொள்ளபோவு
செகருசெந்தனுன்ன செடுநட்டதாபம்பு
விஸ்வதாபிராம வினரவேமா.

(இ-ள்.) மங்கை யோனியில் சம்பந்தப்படுவதை யோசித்துப் பார்த்தால் கோடி பூசைகளெல்லாங் கொள்ளைப்போகும் அதெப்படியெனில் அனலுக்குச் சமீபத்தி லிருக்கினும் தாபங்கெட்டுப் போகுமா போகமாட்டாது சர்வ வியாபியாகிய ஓ ராமா கேளும் வேமா. எ-று. (உகக)

யோனியந்தெபுட்டி யோனிதாஜெருச்சுனு
சன்னுகுச்சிடிபொிகி சன்னுமுட்டு
ஸ்வருஷ்டிலேரனப்ராணி சிக்கேலயெருகடோ
விஸ்வதாபிராம வினரவேமா.

(இ-ள்.) யோனியிடத்திற் பிறந்து யோனியிலுழன்றும் முலையுண்ணுவளர்ந்து அம்முலையைப் பிடிக்கும் பிராணியானவன் இவ்வுலகத்தில்நாணமேனறியானோ சர்வவியாபியாகிய ஓ ராமா கேளும் வேமா. எ-று. (உகஉ)

லிங்கமுபரசிவுடு லீலதோஜ-ஒச்சின
யங்கமந்துலிங்க மமரியுண்டு
தரணிநருலகெல்ல யரயலிங்கமுலேக
புட்டநோளைய புவினிவேமா.

(இ-ள்.) உலகத்தின்கண் லிங்கமென்பது பரமசிவன் அந்தப் பரமசிவனைச் சந்தோஷமாகப் பார்க்க தேகத்தினிடத்தி லமர்ந்திருக்கும் அப்படிப்பட்ட லிங்கமில்லாமல் பூதலத்திலுள்ள நரர்களெல்லாம் பிறக்கமாட்டார்கள் வேமா. எ-று. (உகங)

ஜகதிஜனுலகுனு ப்ரஜாபதியனுலிங்க
முண்டாரதிலிங்க மொண்டநேல
ராதிலிங்கமொச்சிர மனுலபோகம்பு
சேயநேரதை யக்ஷிதினிவேமா.

(இ-ள்.) உலகத்திலுள்ள ஜனங்களுக்குச் சிசுனமென்னும் லிங்கமிருக்க சிலாரூபமாகிய லிங்கமேதுக்கு அந்தக்கல்லுருவமாகிய லிங்கம்வந்து மங்கைகளைப் போகஞ்செய்ய மாட்டாது வேமா.

பாவிம்ப லிங்கமுண்டக
பாம்பகலோகமுனனு ப்ரஃமம்பனகா
காவிஞ்சு விதமுதெலியக
யிவிதமுனனருலுஜெடு துரிலலோவேமா.

(இ-ள்.) பூதலத்தில் யோசித்துப்பார்க்க லிங்கமிருக்க அந்த லிங்கத்தை பிரமமென்று கருதும் விதத்தையறியாமல் மாயாசம்பந்தமாகிய மோகத்தில் மூழ்கி நரர்கள் கெட்டுப் போவார்கள் வேமா. எ-று.

இட்டிலிங்கமந்து யீரேடுஜகமுனு
புட்டிப்ரதிகிருடு புவினிவெலசி
கட்டிகாயமுனிகி காணுகலேயுந்து
ரவனிஜனுலு நெபுடுயரயவேமா.

(இ-ள்.) இப்படிப்பட்ட லிங்கத்தினிடத்தில் பதினான்குலோகங்களும் நாளும் பிறந்துவளர்ந்து கீர்த்தியைப்பெற்று சிலகாலமிருந்து முடிவிலுண்மையிலேயே ஏமனுக்குக் காணிக்கையாவர்கள் எப்போதும் வேமா. எ-று. (உகசு)

நெலகுவொக்கசாரி நெத்துருகாருனு
உஷ்ணமெத்திநபுடு வுபுருச்சிமு
உத்தபுடதிவுலகுனுச்ச காருச்சுனுண்டு
விஸ்வதாபிராம வினரவேமா.

(இ-ள்.) ஸ்ரீகளுக்கு மாதமொருதரம் ரத்தமொழுகும் இடையில் சூடு அதிகரித்தபோது சீழொழுகும் சாதாரணத்தில் மூத்திரம் ஒழிகிக்கொண்டிருக்கும் சர்வ வியாபியாகிய ஓ ராமா கேளும் வேமா. எ-று. (உகஎ)

முட்டுமுட்டனுச்சுனு முட்டாதந்துரு
முட்டுகுதிரியேமி மூலயேமி
நருலகந்ரிகினி நவத்வாரமுலஜெட
புட்டிநபுடெ புட்டெமுட்டுவேமா.

(இ-ள்.) முட்டு முட்டென்றும் அவர்களைத் தொடக்கூடா தென்பர்கள், அந்தமுட்டு குதிர்ந்தென்ன அதற்கு மூலமென்ன உலகத்திலுள்ள மனிதர்கள் யாவருக்கும் நவத்துவாரங்களி லும் பார்க்க அவர்கள் பிறந்தபோதே உண்டாயிற்று முட்டு வேமா, எ-று. (உகஅ)

முட்டுலோனெபுட்டி முட்டண்டுகுனுசோசி
வட்டிதீர்த்தமாடு வாருகாக
முட்டுகுண்டநீள்ளு முஞ்சினுசுச்சிபொனனெ
விஸ்வதாபிராம வினரவேமா.

(இ-ள்.) முட்டுக்குள்ளாகப் பிறந்து முட்டுதொட்டுக்கு வெறு த்து வெருந்தீர்த்தத்தில் ஸ்நானஞ் செய்வார்களதில்லாமல் அந்த முட்டுக்குக் காரணமாகிய பெண்ணனவள் பாண்டத்தில் தண்ணீர் கொண்டுவந்துவைக்க அத்தண்ணீரில் ஸ்னானஞ்செய்த மாத்திரத் தில் பரிசுத்தமாவார்களோ சர்வ வியாபியாகிய ஓ ராமா கேளும் வேமா. எ-று. (உகக)

முரிகிலோனெபுட்டி முரிகிலோனெபெரிகி
முரிகிப்ரதுகுகிந்த புரிபமெல
முரிகெரிகினவாடு முரிகிலோபுட்டுனு
விஸ்வதாபிராமः வினரவேமா.

(இ-ள்.) அழுக்குக்குள்ளே பிறந்து அழுக்குகுள்ளே வளர் ந்து அந்த அழுக்குப் பிழைப்புக்கேனோ இவ்வளவு பேராசை அவ்வழுக்கை அறிந்தவன் அந்த அழுக்குக்குள்ளே பிறப்பானோ சர்வ வியாபியாகிய ஓ ராமா கேளும் வேமா. எ-று. (உஉ0)

முரிகிநவபிலமுல மொனசிகாருச்சுநுண்ட
பரிமபாவனமனி பலுகனேல
தோலுபொம்மலாட்ட கீடுதெலியலேரு
விஸ்வதாபிராம வினரவேமா.

(இ-ள்.) நவத்துவாரத்திலிருந்தும் அழுக்குத் தடையின்றி ஒழுகிக்கொண்டிருக்க அந்த தேகத்தை மேலானதென்று மொழி வதேனோ தோல்பொம்மை யாட்டத்தைக்கண்டு மயங்கி அதனிட த்திலிருக்கும் கெடுதியை யறியமாட்டார்கள் உலகத்தினர் சர்வ வியாபியாகிய ஓ ராமா கேளும் வேமா. எ-று. (உஉக)

முரிகிகொம்பலோன னரிகிஞ்சிஜீவுனி
கர்மபாசமுனனு கட்டிவேஸி
யிட்டிகாமஜீவி கெச்சட்டிமோக்ஷம்பு
விஸ்வதாபிராம வினரவேமா.

(இ-ள்.) அழுக்கு நிறைந்த வீட்டிற்குள்ளே ஜீவனை இரிச்சி வைத்து அந்த ஜீவனைக் காமமென்னும் பாசத்தினாலே கட்டிப் போட்டு சிரமமடையும்படிசெய்ய அந்தஜீவன் அதற்குள்ளிருந்துக் கொண்டு படாதபாடும் பட்டுக்கொண்டிருக்கும் இப்படிப்பட்ட கர்மஜீவனுக்கு யெங்குளது மோக்ஷம் சர்வ வியாபியாகிய ஓ ராமா கேளும் வேமா. எ-று. (உஉஉ)

தோலுலோனபெட்டி தோமங்கதோமங்க
முரிகிகாரிகாரி முத்தகட்டெ
முத்துசங்கபெட்டி முத்தாடனேலரா
விஸ்வதாபிராம வினரவேமா.

(இ-ள்.) தோலுக்குள்ளேவைத்துத் தேய்க்கத்தேய்க்க அழுக்கு ஒழிகி மொத்தைகட்டியது அம்மொத்தை பந்துமாதம் பூர்த்தியானவுடனே அவயவாதிகளுடனே பிறக்க அப்பிள்ளையை இடுப்பினில்வைத்து முத்தமிடுவதேனோ சர்வ வியாபியாகிய ஓ ராமா கேளும் வேமா. எ-று. (உஉக)

சுக்லமரசிகூட சுபாவர்ணமுதெலுபு
நரயசோணிதமுலு நயமுநெருபு
தெலுபுனெருபுரெண்டு தேஜரில்லுச்சுனாத்ம
விஸ்வதாபிராம வினரவேமா.

(இ-ள்.) சுக்கிலமென்றும் சோணிதமென்றும் இரண்டுண்டு அதில் சுக்கிலமானது வெண்மைநிறத்தோடும் விளங்கும் சோணிதமானது சிவந்தநிறத்தோடும் விளங்கும் இந்த வெண்மையுஞ் சிகப்பு மிரண்டுஞ்சேர்ந்துதான் ஆத்துமா பிரகாசித்துக்கொண்டிருக்கும் சர்வ வியாபியாகிய ஓ ராமா கேளும் வேமா. எ-று. (உஉச)

சோணிதமு காமசதுலகு
ப்ராணிதமுககசுக்லமனுகு பஹு புருஷுலகுன்
ப்ராணமெ நெலுபெருபுகலய்
கர்னகுயீமதஹகர்தி கனுடகுவேமா.

(இ-ள்.) புருடனிடமிருந்து வெளிப்படுவது சுக்கிலம் ஸ்ரீக ளிடமிருந்து வெளிப்படுவது சோணிதம் வெள்ளையும் சிகப்புங்கல ந்து பிராணனாகும் இந்த தேகத்திற் காதாரமான கனம்பொருந் திய வேமா. எ-று. (௨௨௫)

மன்னுநீருனக்னி மரிகாலிதோகூடி
மன்னுதோடவிஷயி மெசகஜேரி
கன்னுகானகுண்ட கலிகதேஹம்பு
விஸ்வதாபிராம வினரவேமா.

(இ-ள்.) பிருதிவு அப்பு தேயு வாயு அக்கினியென்னும பஞ்ச பூதங்களுஞ்சேர்ந்து அம்மண்ணுடன் விஷயமாகிய ஆண்கூடிக் கல ந்து கண்களுக்குக்காணமல் தேகமானதுண்டாயிற்று சர்வவியாபி யாகிய ஓராமா கேளும் வேமா. எ-று. (௨௨௬)

பஞ்சபூதம்மதுபரக நிந்திரியமுதோ
சஞ்சரிஞ்சநபுடு ஜகமுனுகு
சஞ்சரிம்பருன்ன ஜகமுனுகலுகுனு
விஸ்வதாபிராம வினரவேமா.

(இ-ள்.) பஞ்ச பூதங்களைந்தும் இந்திரியங்களுடன் கலந்து சஞ்சரிக்கும்போது ஜெகத்துண்டாகும் அந்தப் பஞ்ச பூதங்கள் ஐந்தும் இந்திரியங்களுடன் கலந்து சஞ்சரிக்காம லிருக்குமாகில் ஜெகத்துண்டாகுமா உண்டாகமாட்டாது சர்வ வியாபியாகிய ஓ ராமா கேளும் வேமா. எ-று. (௨௨௭)

ரதமுனகு நைதுசீலனு
யதிகுண்டதலிஞ்சிநபுடு யருகுனுரதமுன்
ரததசினு வுலதுசீலனு
விதிநம்புகநடுவுவானி வெதுகுமுவேமா.

(இ-ள்.) ரதத்திற்கு ஐந்து ஆணிகள் அந்த ரதத்திற்கு அதி பனானவன் அதட்டினபோது அந்தேர் ஓடும் அதைப்போல தேக மென்னும் ரதத்திற்கும் ஐந்தாணிகளுண்டு இந்தேகமாகிய ரத த்தை நடத்துமவனைத் தேடிக்கண்டு பிடித்துக்கொள் வேமா. ()

பூதமுலே துண்டகனே
க்யாநிகதாலெனுக்கதேஹிகலிகினவுவிலோ
லோனைதன தத்வமெருக்க
நூதிலேபடுச்சுந்துரவுடு நோமகவேமா.

(இ-ள்.) பூதங்கள் ஐந்திருப்பதனுலேயே புகழொடு நாறெரு தேகத்தைப் பெற்று மனிதனுண்டாகிறன் இவ்வுலகத்தில் அம்ம னிதன் தத்துவத்தை யறியாமல் ஆழமாகிய கடலில் மூழ்கி யிருப் பார்கள் வேமா. எ-று. (உஉக)

சிலஹைை துண்டகனே
சாலாதனுவனெடிரதமு ஜகமுலதிருகுன்
சிலெர்கட்டி வீடிபடிதே
வேளனுதலுவனெடி ரதமுவீடுனுவேம.

(இ-ள்.) ஐந்து ஆணிகளிருப்பதினுலேயே,தேகமென்னும்ரத ங்களிவ்வுலகத்தினில் கணக்கின்றிதிரியும் அந்த ஆணிகளில் ஒன்று அவிழ்ந்து விழுந்தால் அப்போது தேகமென்னும் ரதமும் விழுந்து விடும் வேமா. எ-று. (உகூ0)

சகலவஸ்துவுலுனு சந்தநனுவுலு
புட்டகெடபஞ்ச பூதமுலகு
தானிதாணிசேந்த தகபூஷணமுஜேயு
யேமிலேதுசுகமு யெருகுவேமா.

(இ-ள்.) சகலவஸ்துக்களும் தேகங்களும் பஞ்ச பூதங்களும் இந்திரியங்களும் சதா பிறக்குமிட மெங்கேயென்றுயோசிக்கில்அது அதினுலேயே சகலத்தையும் பிறக்கச்செய்யும் அதினுலே தாகிலும் லாபமுண்டோவெனில் ஒருவிதசுகமுமில்லை யிதையறிந்துக்கொள் வேமா. எ-று. (உகூக)

பிண்டஅண்டமந்து பெனகுசுன்னட்டி
தண்றிபிந்துநாது தனரகூடி
யண்டமைநில்ச்சின யபுடுகர்ப்பமடறு.
யவனிஜனுலநபுடு நரயவேமா.

(இ-ள்.) பிண்ட அண்டத்தினிடத்தில் பிணைந்துக்கொண்டிரு க்கப்பட்ட தந்தையின் சுக்கிலமுந்தாயின் சோணிதமும் ஒன்றுசே ர்ந்து அண்டமாகி நின்றபோது உலகவாசிகளைநோக்கி விசாரிக்கிற போது அவர்கள் அன்னை கெர்ப்பவதியாயிருக்கின்றுளென்பார்கள் வேமா. எ-று. (உகூஉ)

கடுபுலோனதுன்ன கனமைனபிண்டம்பு
முந்துகஷ்டமேல்ல மொதட்டநோசி
யிகனுனனனநேனு யிலமீதக்ஞானம்பு
புத்திதெச்சுகொனுச்சு கொத்திவேமா.

(இ-ள்.) வயிற்றுக்குள்ளாகவிருக்கும் மேன்மையான பிண்டமானது தான்முன்னம் அனுபவித்த கஷ்டங்களை யெல்லாம் நினைத்து நினைத்து சம்சாரம் துர்க்குணம் முதல்யாவற்றையும் வெறுத்து யினிமேலாகிலும் நானிவ்வுலகத்தில் நற்புத்தியை யனுசரித்து க்ஞானமார்க்கத்தைக் கூடியவரையில் தேடுவேனென்று சுத்தசத்துவகுணத்தை யடைந்திருக்கும் வேமா. எ-று. (உ௩௩)

கர்ப்பசின்னெகலிகி கனவுபத்ரவமுசேத
தகிலிபாதபடுச்சு தல்லிகடுபு
பிண்டமுதயமைன ப்ரியமுகாஜெச்சேடி
யண்டஜனுலகபுடுநாயவேமா.

(இ-ள்.) தாயின் வயிற்றிலிருந்து க்ஞானமார்க்கத்தைச் சிந்தித்துக்கொண்டிருக்கு மப்பிண்டமானது சிறியபையினுல் நெருக்குண்டு சபராக்னியினுலே தகிக்கப்பட்டு சொல்லப்படாத கஷ்டத்தினுலே பகவானை தியானித்துக் கொண்டிருக்க அன்னைக்குப் பிரசவேதனையுண்டாகிப் பிண்டம் வெளிப்பட்ட மாத்திரத்தில் அச்சிசுவு சிறியதுவாரத்தில் நெருக்குண்ட சிரமத்தினுல்பூர்வக்ஞானத்தை மறந்து ஆயாசமேலிட்டு மெய்மறந்து உலகமாய்கைக்குள்ளாகியிருக்கும் வேமா. எ-று. (உ௩௪)

பிண்டம்பை யுதரம்புன
வுண்டுகொன்னுள்ள வெனுகவுண்ட துசும்மி
பிண்டம்பை தரபடினனு
பிண்டம்பைபிராணரக்ஷப்ருதினிவுவேமா.

(இ-ள்.) இவற்றுள் சிலது பிண்டமாகி உதிரத்திலிருக்கும்சில நாட்களுக்குப்பின்பு அப்பிண்டமானது கரைந்து போவதுமுண்டு சிலது பூரணபிண்டமாகித் தரையில் விழுந்தபோதிலும் அப்பிண்டமானது சுதந்திரத்தினுல் தன் பிராணனைக் காப்பாற்று வதிலேயே முயற்சிகொண்டிருக்கும் வேமா. எ-று.

புட்டினபுடுபுவிலொ பொட்டுகோயுமட்டஞ்சு
அபுடெகுருவு முத்ரனுனதிச்செ
முத்திரிலேனிநருலு முஜ்ஜகம்புனலேரு
விஸ்வதாபிராம வினரவேமா.

(இ-ள்.) உலகத்தில் பிள்ளைபிறந்தபோது அப்பிள்ளைக்கிமுத்திரைத் தொப்புள்றுக்கும்படி குருநாதன் கட்டளையிட்டார் ஆகையால் முத்திரையில்லாத மனிதர்கள் மூவுலகத்திலுமில்லை சர்வவியாபியாகிய ஓ ராமர் கேளும் வேமா. எ-று. (உ௩௫)

புட்டுவாரிலெவரு புட்டனிவாரோரு
புட்டிபுட்டநட்டி புருஷுலெவரு
புட்டிபுட்டனடுல போதிஞ்சிருடரா
விஸ்வதாபிராம வினரவேமா.

(இ-ள்.) இப்பூதலத்தில் பிறப்பவர்கள் யாவர் பிறக்காதவர்கள் யாவர்பிறந்தும் பிறவாமலிருக்கும் உத்தமபுருஷர்கள் யாவர் அப்படிபிறந்தும் பிறவாததுபோல நின்மனதுக்கு நீயே போதித்துப்பாரும் சர்வவியாபியாகிய ஓ ராமா, கேளும் வேமா. எ-று. ()

புட்டுவெருகனதனி புருஷார்த்தமுலுபூமி
புட்டரேமிவாரு கிட்டரேமி
புட்டலோனசெதலு புட்டவாகிட்டவா
விஸ்வதாபிராம வினரவேமா.

(இ-ள்.) இவ்வுலகத்தில் தன்பிறப்பை யறியாத புருஷனனவன் பிறப்புயேதுக்கு அவனிறப்பு ஏதுக்கு புத்துக்குள்ளே செல்லு பிறக்காதா யிறக்காதா சர்வவியாபியாகிய ஓ ராமா கேளும் வேமா. எ-று. (௨௨அ)

புட்டிசச்சுநருடு பூர்வமெதெலியக
பட்டபயலுனுண்டி ப்ரமசியபுடு
தெலிவிவிடச்சிபூமி திருகங்கனோட்டிகி
விஸ்வதாபிராம வினரவேமா.

(இ-ள்.) பிறந்து இறக்கும் மனிதன் சதாகாலமும் நமக்குப் பிறப்பிறப்பு விடாதிருக்குமென்று ஆதியிலே யறியாமல் வெட்ட வெளியிலிருந்து பிரமித்து அப்போது தெளிவை விடுந்துப் பூமியில் திரிவதேதுக்கு சர்வவியாபியாகிய ஓ ராமா கேளும் வேமா.

ஏமிகொஞ்சுவச்செ னேமிதாகொனிபோயே
புட்டுவேளநருடு கிட்டுவேள
தனமுலெச்சட்டிகேகு தானேகுனெச்சட்டிகி
விஸ்வதாபிராம வினரவேமா.

(இ-ள்.) மனிதன் பிறக்கும்போது யென்ன கொண்டு வந்தான் இறக்கும்போது யென்னதான் கொண்டுபோவான் அன்றியும் பிறக்கும்வேளையிலும் இறக்கும்வேளையிலும் பொருள் எவ்விடத்திற்கேகும் தானெங்கு போவான் சர்வவியாபியாகிய ஓ ராமா கேளும் வேமா. எ-று. (௨௩0)

ஒச்செதி பொய்யெதியுனுடரி
வச்செடிதியுகானலேரு சஹஜம்பனுசுன்
விச்சலவிடி காதிருகுச்சு
சிச்சுனபடுமிடுத்தவலெனெ க்ஷிதிலோவேமா.

(இ-ள்.) உலகத்தில் மனிதர்கள் வருவதும் போவதும் மறுபடியும் வருவதுங் காணமாட்டார்கள் இது யியற்கையாமென்று நினைத்து இஷ்டப்படியாக திரிந்துக்கொண்டிருந்து காமத்தீயில் விழும் மங்கையைப்போல முடிவில் அம்மனிதர்கள் நரகக்குழியில் விழுவார்கள் வேமா. எ-று. (உசக)

சகலம்பை தாபுட்டுனு
சகலமுலாகட்டிகி கானுசர்வமுதானே
விகடம்பை தினஜம்புனு
யகட்டாயாவஸ்து வெவ்வரந்துருவேமா.

(இ-ள்.) சகலவஸ்துக்களும் நானாகிப்பிறக்கும் அந்த வஸ்துக்கள் அனைத்தும் பசிதாபத்திற்காகவும் சிருஷ்டித்திருப்பதால் அவ்வஸ்துக்கள் யாவற்றையும் விகடமாகித் தின்னக்கொல்லும் ஆஹா அந்த வஸ்துவை யாவர் சொல்லுவார்கள் வேமா. எ-று. (உசஉ)

தானுபுட்டுசோட்ட தனுஜெச்சிபரிகின
தானுபுத்திதிருகு தரணிலோன
தானுபுட்டுசோட்ட தத்வம்புதலபோய
விஸ்வதாபிராம வினரவேமா.

(இ-ள்.) மனிதன் தான் பிறந்தவிடத்தில் தன்னைப்பார்த்து வசனித்த பிரமத்தின் வழிபட்டுத் திரிவா னிவ்வுலகத்திலுள்ளே அப்படியவன் திரிவதற்குக்காரணம் யாதெனில் ஒவ்வொருவனுந் தான் பிறந்தவிடத்தில் யோசித்துப்பார்க்கத் தனக்குத்தானே தத்துவம் விளங்கும் சர்வவியாபியாகிய ஓ ராமா கேளும் வேமா. ()

பாலனு நெத்துகநப்புடு
சாலங்காஜலகமார்ச்சி ஸஹஜமுதோடன்
பாளிதொ மந்த்ரபுசானியு
யீலோகுலுமெச்ச கானுயிலவைவேமா.

(இ-ள்.) பிறந்த பாலையெடுத்துக்கொண்டபோது இயற்கையிலேயே அப்பாலகனுக்கு ஸ்நானஞ்செய்வித்து அதிகப் பிரியத்துடன் மருந்துவச்சியானவள் அந்தப் பிள்ளையைக்காண்பிக்கக்கண்டு இவ்வுலகத்தார் புகழ்ந்து கொண்டாடி மகிழ்வார்கள் வேமா. ()

